3rd December 1950 THE SHIVAJI TAMIL WEEKLY.

# சிவாஜி



மூர்த்தி

புது திட்டம் வகுக்கும் ஸ்ரீ கிருபளானி

The 'Shivaji' Weekly Published Every Sunday



BIG BAZAAR TRICHINOPOLY

சிறிய தொடர் கதை. "பரதேசி"

# இருளில் ஒளி

### அத்தியாயம் 4.

### மூளை குழம்பிற்று!

மறுநாள் காலை 7-30 மணி வண்டியில் மதராஸுக்குத் திரும்பிச் சென்றுகொண்டிருந்தேன். முதல் நாள் நிகழ்ந்ததெல்லாம் கனவுபோல் இருந்தது. இதுவரை நான் சகோதரி விரஜாவைச் சந்தேகிக்கவில்லை. இப்போது அவள்கூட அவர்கள் கட்சியில் சேர்ந்தவள் தானோ என்ற சந்தேகம் மெதுவாகத் தலைதூக்க ஆரம்பித்தது!... கணவனிருக்குமிடம் அழைத்துச் செல்வதாகச் சொல்லி ஏமாற்றித்தான் அவளை அழைத்துச் சென்றிருக்கவேண்டும்...! உண்மையில் அவளுடைய கணவனும் இவர்களுடன் தொழில் தொடர்புகொண்டவனாகத்தான் இருக்கவேண்டும்!......

இப்படியெல்லாம் ஆதாரமில்லாத தெளிவற்ற சிந்தனை அலைகளில் என் மனம் அல்லல்பட்டது!......என்னால் எதைப்பற்றியும் எந்த முடிவுக்கும் வரமுடியவில்லை!...வாழ்வில் நடைபெற முடியாத வரட்டுக் கற்பனைக் கதைகளை எழுதுகிறவர்களைக் கண்டித்து நான் குறிப்பு எழுதியது உண்டு. ஆனால் அத்தகைய என் வாழ்விலேயே இந்த அசம்பாவிதங்களெல்லாம் நடைபெறுகின்றனவே!......இதற்கு நான் என்னசெய்யட்டும்?

இந்த உலகத்தில் யாருக்குமே "ஐயோ!" என்று இரக்கம் காட்டக்கூடாது!......ஒருவேளை நம்மையும் மீறிக் கருணை பிறந்தால் அதைச் செயலில் கொண்டுவரக்கூடாது!...தெருப் பிச்சைக்காரனின் தொல்லைகளை ஏட்டில் விவரிப்பதோடு நின்றுவிடவேண்டும்!...உடன பிறவாத சகோதரிகளுக்காக இரக்கம் காட்டுவதை இரண்டு சொட்டுக் கண்ணீருடனும் நான்கு பக்கச் சிறுகதையுடனும் நிறுத்திக்கொள்ளவேண்டும்!...முட்டாள்தனமாகப் பிறருக்கு உதவிசெய்ய முனையக்கூடாது!...

நினைக்க நினைக்க எனக்கு ஒருபுறம் ஆச்சரியமாயிருந்தது!... என்மீது பொய்க் குற்றம் சாட்டிய பதஞ்சலியும் ஹயக்ரீவனும் என்னைச் சுலபமாக விடுதலை செய்வானேன்?......உண்மையிலேயே என்னை ஜெயிலுக்கு அனுப்புமளவு ஆதாரம் கிடைத்திருக்கும்போது சும்மா விட்டுவிடுவானேன்?...

இதுவரை உருப்பெறாத சிந்தனை தற்போது உருப்பெற்று எதிர்நோக்கி ஓடிற்று. ஒருவேளை பதஞ்சலி சொன்னது அவ்வளவும் பொய்யாயிருக்கலாம்!......விரஜாவும் கிழவரும் இன்னும் பதஞ்சலி வீட்டிலேயே இருக்கலாம்!...நான் அவர்களைச் சந்தித்தால் விஷயம் கெட்டுவிடும்!......அவர்களிடமிருந்து மேலும் பணம்கறக்க முடியாது!...அதற்காகவே என்னை இப்படிக் கைதுசெய்து பின்பு விடுதலை செய்திருக்கிறார்கள்!...

ஒருவேளை ஹயக்ரீவாசாரி சென்னைக்கு என்மேல் 'புகார்' அனுப்பியதுகூடப் பொய்யாக இருக்கலாம்!...எதை நம்புவது? ...எதை நம்பாமலிருப்பது?...

என்மூளை மறுபடியும் குழம்ப ஆரம்பித்துவிட்டது!.....வண்டியும் மண்டியாவில் வந்துநின்றது!......மண்யா ஸ்டேஷனைக் கண்டதும் என் மனதில் மற்றொரு யோசனை தோன்றிற்று. அனந்த பத்மனாபசர்மாவைப்பற்றி அந்த ஊரில் துப்பு விசாரிக்கலாம்!... சாத்தியமானால் அவன் தாய்தந்தையர் உற்றார் உறவினரைக்கூடச் சந்திக்கலாம்!......

—எப்போதுமே என் இதயத்தில் எண்ணம் காத்திருப்பதில்லை!...எனவே நான் ஸூட்கேஸுடன் கீழே இறங்கினேன்! ......ரொம்பவும் பழக்கமுள்ளவன்போல் டிக்கெட்டைக் கொடுத்துவிட்டு நேரே நடையைக் கட்டினேன்!......எதிர்ப்புறத் தெருவில் கொஞ்ச தூரம் சென்றதும் "அம்பிகா விலாஸ்" என்ற ஹோட்டலைக் கண்டேன். இரவுகூட ஒன்றும் சாப்பிடவில்லையாதலால் அதில் நுழைந்தேன்!...அங்கே ஒதுப்புறமாகவுள்ளதொரு மேஜையில் உட்கார்ந்தேன். பக்கத்தில் "ப்ளைவுட்" பலகையால்தடுத்த பகுதியில் பெண் குரல் கேட்டது.....!

மறுபடியும் என் மூளை குழம்பிற்று...என்றாலும் நான் சம்பாஷணையை நன்றாக கவனித்துக் கேட்டேன்.

"ஆமாம்!...அவரை ரொம்ப அடிப்பார்களோ!......"

"சே சே!.........அதெல்லாம் ஒண்ணும்செய்ய மாட்டார்கள்!. ...நேரே மதராஸுக்கு ஒரு டிக்கெட் வாங்கிக்கொடுத்து அனுப்பிவைப்பார்கள்!"

"பாவம்!...அநியாயமாக என்னால் அவருக்கு இந்தக் கஷ்டமும் அவமானமும்!......"

—மேலும் என்னால் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை!...

"விரஜா!......இதோ நான் வந்துவிட்டேன்!" என்று உரக்கக் கத்தினேன்.

சுற்றுமுற்றுமுள்ளவர்கள் கொல்லென்று சிரித்தனர். அதையெல்லாம் நான் லட்சியம் செய்யாமல் எழுந்துசென்று அந்தப் பகுதியில் பார்த்தபோது அங்கே யாருமில்லை!...

என் மூளை அடியோடு கலங்கிவிட்டது. வெறி பிடித்தவன்போல் நான் அந்த ஹோட்டலை விட்டு ஓடினேன்!...எங்கெங்கும் விரஜாவின் குரல் கேட்டது போன்ற பிரமை தோன்றிற்று!..

"அண்ணா!...இதோ நான் இருக்கிறேன்!...என்னைத்தெரியவில்லையா?..."

பொய்யல்ல!; நிஜமாகவே இந்தக் குரல் என் செவியில் ஒலித்தது!...

அப்படியானால்?.........

"அடே துரோகி!......ஏய் பதஞ்சலி!...அவளை நீ கொன்றுவிட்டாயா?.........அவள் ஆவி வடிவில் என்னைப் பின்தொடர்ந்து கதறுகிறாளா?......"

மறுபடியும் நான் ஸ்டேஷனுக்கே வந்தேன்!...பெங்களூர் செல்லும் வண்டி எப்போதோ போய்விட்டது!......அடுத்தபடி வருவது மைசூர் போகும்வண்டிதான்!...

என்னை மறுபடியும் சிந்தை பிடித்துக்கொண்டது—"என்ன வந்தாலும் வருகிறதென்று மறுபடியும் மைசூர் செல்வது; இரவு 8 மணிவரை யார் கண்ணிலும் படாமல் வேறு ஏதாவதொரு ஹோட்டலில் தங்கியிருப்பது. பின்பு தேசிகாசாரியார் வீட்டுக்குச் சென்று கவனிப்பது!..."

—சிந்தனை உருப்பெற்றதும் மைசூருக்கு ஒரு டிக்கெட் வாங்கிக்கொண்டேன்!.......ஆனால் வண்டி வருமட்டும் என் முடிவு அப்படியே நிலைத்திருக்குமா என்று எனக்கே தெரியவில்லை!.



### அத்தியாயம் 5.

### இருள் அகன்றது!

நல்ல வேளையாக வண்டி வந்தபோது என் முடிவு மாறவில்லை. நான் குறிப்பிட்டபடி மைசூருக்கே திரும்பிச்சென்றேன். அங்கே பகலெல்லாம் "பீமவிலாஸ்" ஹோட்டலின் அறையொன்றில் அடைந்து கிடந்தேன். என் மனம் சிந்தனா சக்தியை இழந்து மரத்துப் போயிருந்தது!... வெளியே சென்று உலாவி வரலாமென்றால் என் தலைமேல் ஆபத்து நடனமாடிக்கொண்டிருந்தது. 'தலை எழுத்தே' என்று இருட்டும்வரை அங்கேயே அடைந்து கிடந்தேன் பின்பு இரவு எட்டு மணிக்கு மேல் பழைய அடையாளத்தை ஞாபகப்படுத்திக்கொண்டு தேசிகாசாரியாரின் வீட்டுக்குப் புறப்பட்டேன். அந்த இடத்தைக் கண்டுபிடிக்க வெகுநேரம் வரை நான் அலைய வேண்டியதாயிற்று. கடைசியாக அந்த வீட்டுக்கெதிரில் நான் போய் நிற்பதும் வீட்டினுள்ளேயிருந்து ஒரு தடியன் வெளியே வருவதும் சரியாயிருந்தது.

"யாரது?" என்றான் அவன் கொஞ்சம் அதட்டலாகவே.

"எனக்கு அசலூர்; தேசிகாசாரைப்பார்க்கணும்!..."

"போ போ!... வேறே வேலையில்லை!...பொழுது விடிஞ்சா அஸ்தமிச்சா உங்களுக்கெல்லாம் மூன்றும்தாரம் நான்காம் தாரத்துக்குப் பொண்ணு

(11-ம் பக்கம் பார்க்க)

பாத்ருடுவின்

**பாலசஞ்சீவினி (Regd)**

(இது ஒன்றுதான் அசல் விஜயநகர மருந்து)

குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு சொற்ப காலத்திலேயே நிச்சய குணமளிக்கும் சிறந்த மருந்து. 58 வருஷ காலமாகப் பல்லாயிரக்கணக்கான குழந்தைகளை இக்கொடிய குலைக்கட்டி வியாதியினின்று காப்பாற்றி வருவதனால் டாக்டர்கள் இச்சஞ்சீவினியையே உபயோகித்துக் கொண்டிருக்கிறார்கள்.

எல்லா மருந்து ஷாப்புகளிலும் கிடைக்கும்

போலி மருந்துகளைக் கண்டு ஏமாறாதீர்கள்.

Dr. பிள்ளாபாப்பய்யாபாத்ருடு & பிரதர்

11, தெற்கு மாடவீதி, மயிலாப்பூர், மதராஸ்—4

கும்பகோணம் கிளை:— 7 சாரங்கபாணி கோவில், கீழவீதி.

கிளை:— திருச்சி 15, புகழியபிள்ளை தெரு, தெப்பக்குளம் போஸ்டு, திருச்சி

சகல விதமான
அச்சு வேலைகளுக்கும்
சிறந்த இடம்
*
ஹனுமான் பிரஸ்
சமஸ்பிரான் தெரு,
பெரிய கடைவீதி, திருச்சி.
*
வெளியூர் ஆர்டர்கள்
உடனுக்குடன் கவனிக்கப்படும்.

# சிவாஜி

ஆசிரியர் :— திருலோக-சீதாராம்

| கோட்டை | திருச்சி 3—12—50 | முற்றுகை |
| --- | --- | --- |
| 16 | விக்ருதி-ஞு கார்த்திகை-மீ 18-உ | 1 |

"சிவாஜி" சந்தா
ஆண்டு 1-க்கு ரூ. 7—0—0
6-மீ ரூ 3—8—0
தனிப்பிரதி அணு 2.

மானேஜர் : "சிவாஜி"
தபால்பெட்டி நெ. 332
தெப்பகுளம் P. O.
திருச்சிராப்பள்ளி.

முன்வாரத் தொடர்ச்சி

## ஐரோப்பாவில் ஜி. டி. நாயுடு

பிரயாணக்காட்சிகள்

மே மாதம் நாங்கள் லண்டன் சென்ற உடன்காலில் ஒரே ஒரு நாள் மட்டும் **சாரிங் கிராஸ் ஹோட்டலில்** தங்கியிருந்த பின், **லங்காஸ்டர் கேட்** என்னுமிடத்திலுள்ள **போன் வாசல் விடுதியில்** போய்ச் சேர்ந்தோம். ஸ்வீடனுக்கு நாங்கள் புறப்படும்போது கையோடு கொண்டு போகவேண்டிய ஒரு சில சாமான்கள்கொண்ட பைகளைத் தவிர மற்றவற்றையெல்லாம் இந்த ஹோட்டலில்தான் அடைக்கலமாக வைத்துவிட்டுப் போனோம். அப்படி விட்டுவிட்டுப் போன சாமான்களில் அருமையான தோல் பை ஒன்றும் உண்டு. கோவையில் கோபால் பாக் மாளிகைத் தொழிற்சாலையிலேயே தயாரிக்கப்பட்டது. சித்தடக்கமாகப் பலபொருள்களைத் தன்னகத்தே வைத்துக்கொள்ளக்கூடிய நூதனமான வேலைப்பாடுகள் அமைந்தது. இந்தப் பையில் வருமான வரி சம்பந்தமான கணக்குகளும் கடிதப் போக்குவரத்துக்களும் வைத்துப்பூட்டியிருந்தேன். சென்னையில் நீதிமன்றத்திற்குப் போகும்போது தேவைப்பட்டதனால் கோவையிலிருந்தே இவற்றைக்கொண்டு வந்திருந்தேன். பம்பாய்க்குப் புறப்படும் விமான அவசரத்தில் இவையும் எப்படியோ என்னுடனேயே வந்துவிட்டன. இந்தக் கணக்குகள் தவிர, லண்டன் பொருட்காட்சி சாலையில் சேகரம் செய்த அருமையான வெளியீடுகள், இந்திய உடைகள் யாவும் இந்தப் பையில்தான் இருந்தன.

ஸ்வீடன், டென்மார்க், ஜெர்மனி, ஸ்விட்சர்லாந்து ஆகிய தேசங்களில்சுற்றிவிட்டு விமான மார்க்கமாக லண்டன் வந்து சேர்ந்தோம். ஹோட்டலுக்குச் சென்று கொடுத்துவிட்டுப்போயிருந்த தோல்பையைக் கேட்டேன். சில நாட்கள் வரை அவர்கள் தாமதம் செய்து பிறகு ஏதோ சாக்குப்போக்குச் சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள். கடைசியில் ஹோட்டல் கீழ் தளத்தில் அவர்களின் கிடங்குகளுக்குச் சென்று தேடி எடுக்கும்படியாகிவிட்டது. மற்றவையெல்லாம் கிடைத்தனவேயன்றி இந்த ஒரு பை மட்டும் காணப்படவேயில்லை.

நாங்கள் ஸ்வீடனில் தங்கியிருந்தபோது அதே சமயத்தில் இந்தஹோட்டலில் வந்து தங்கி விட்டுப்போன யாரோ இருவர் இந்தப் பையையும் தங்களுடன் கொண்டுபோயிருக்க வேண்டுமென்று விசாரித்ததில் ஒருவாறு புலனாயிற்று. அவர்களின் விலாசத்தைத் தேடிக் கண்டுபிடிக்க எவ்வளவோ முயற்சித்தும் முடியவில்லை.

என் பை காணமற்போனதற்கு நான் கவலைப்படவில்லை. அதற்குள் நான் காப்பாற்றி வைத்திருந்த அமெரிக்க, இங்கிலீஷ் ஜெர்மனியக் காகிதங்கள் அனைத்தும் அருமையான செய்திகள் கொண்டவை. விவசாய சம்பந்தமான எனது சொந்தத் தாள்கள் அதுசம்பந்தமான சுமார் நூற்றுக்கு மேலான புகைப்படங்கள் ஆகியவையெல்லாம் இழக்கும்படியாகிவிட்டது தான் எனக்கு வருத்தம் கொடுத்தது.

பாடிங்டன் போலீஸ் ஸ்டேஷனில் இந்தப் பை திருட்டுப் போனது சம்பந்தமாக ஒரு பிரியாது கொடுத்தோம். இந்த நிமிஷம் வரையில் அவர்களால் அதைக் கண்டுபிடிக்க முடியவில்லையென்றே சொல்லிவருகிறார்கள். பை காணமற் போய்விட்டதென்று அறிந்தவுடனே வேதனையும் திடிப்பும் எனக்கு ஏற்பட்டது உண்மைதான். எனினும் ஒரு வகையில் அதையும் ஒரு நன்மையாகவே கருத வேண்டியிருக்கிறது. அந்தப் பை கிடைத்து அதற்குள் நான் சேர்த்துவைத்திருந்த பெருந் தொல்லைகளையெல்லாம் மறுபடியும் நான் வெளியே எடுத்துப் பார்த்து அவைபற்றி என்னைக் குழப்பிக்கொள்ள வேண்டிய அவசியமில்லாமல் போய் விட்டதல்லவா?

லண்டன் பொருட்காட்சியில் சந்தித்துப் புதிதாக அறிமுகம் செய்துகொண்ட பல நண்பர்களைப்பற்றிய விபரங்கள் விலாசங்கள், பழைய நண்பர்களைப் பற்றிய குறிப்புகள் யாவும் அந்தப் பையில்தான் இருந்தன. அவர்களை யெல்லாம் மறுபடியும் போய் சந்தித்துப் பேச எண்ணியிருந்தேன். விவசாய ஆராய்ச்சி சம்பந்தமான குறிப்புக்களையும் புகைப்படங்களையும் கொண்டுபோய், விவசாய நிபுணர்களையும், பண்ணைகளையும் நேரில் பார்த்து விவாதிக்க எண்ணியிருந்தேன். இந்த சிரமமெல்லாம் (பை காணமற்போனதனால்) தீர்ந்துவிட்டது பாருங்கள்.

இது கிடக்கட்டும். சிலசமயங்களில் அந்தப் பைக்குள்ளிருந்து வருமான வரிக்கணக்குகளும் கடிதங்களும் வெளியே எடுக்கப்பட்டு அவற்றின் சிந்தனையில் மீண்டும் என்னை நானே வருந்திக்கொள்ள வேண்டிய பெரும் வேதனைக்கும் இடமில்லாமல் போய்விட்டது இந்தப் பை திருட்டினால்.

தற்போதைக்காவது இந்தத் தொல்லைகளுக்கெல்லாம் இந்தப் பை நஷ்டத்தினால் ஒரு முழுக்குப்போட்டுவிட்டு புதிதாக வாழ்வையும் தொழிலையும் நான் தொடங்க வழி திறப்பது போலத் தோன்றுவதில் ஒரு நிம்மதியாகத்தான் செய்கிறது.

டெலிபோன் டைரக்டரியைத் துணைகொண்டு, நினைவிலிருக்கும் விலாசங்களையும் நண்பர்களையும் தொடர்பு கொண்டோம். இதன் காரணமாக நாளுக்கு நாள் எங்கள் நிகழ்ச்சிகள் அதிகமாகிக்கொண்டிருந்தன. இடையில் நாங்கள் இந்த ஹோட்டலை விட்டு வெளியேறினோம். வேறு இடம் பிடிப்பது பெரிய காரியமாயிருந்தது. தெற்கு கென்ஸிங்டன் ஹோட்டலில் ஒரு நாள் இருந்தோம். மறுநாளே அதை விட்டுச் சென்று **டி வெரே கார்டன்ஸ்** என்னும் இடத்திலுள்ள **ரோட்னி ஹோட்டலில்** போய்ச்சேர்ந்தோம் இங்கு தங்கியிருக்கும்போதுதான் ஒருநாள் சில காரியங்களை முன்னிட்டு பாகனேரி சாமிநாதன் அவர்களுடன் பாரிஸ் மாநகரத்திற்குச் சென்று திரும்பினோம்.

★ சார்லஸ் கன்னிங்ஹாம் அவர்களுடன் புறப்பட்டு பர்மிங்ஹாம் ஸ்டாபோர்டு, பீடர்பர்ரோ ஆகிய இடங்களுக்குச்சென்றேன். பி. எஸ். ஏ. ஸ்தாபனம், டீசல் இஞ்சின் உற்பத்திச்சாலை ஆகியவற்றைப் பார்வையிட்டேன். இதே தருணத்தில் லிவர் பூலில் பிரிட்டானிய மருத்துவக்கழகங்களின் மாநாடு ஒன்று நடைபெற்றுக் கொண்டிருந்ததனால், அதில் கலந்து கொள்ள பெருந்துறையிலிருந்து வந்திருந்த டாக்டர் **விஸ்வநாதன்** அவர்களுடன் டாக்டர் ராமஸ்வாமி அய்யரும் போயிருந்தார். எனக்கு பர்மிங்ஹாம், ஸ்டாபோர்ட் ஆகிய இடங்களில் வேலை முடிந்ததும் சார்லஸ் கன்னிங்ஹாம் லண்டன் திரும்பிவிட்டார். நான் மட்டும் தனியாக நாட்டிங்ஹாம் சென்றேன்.

டீசல் இன்சின்களில் உஸ்வாஸ, நிஸ்வாசங்களுக்காக இரண்டு அடைப்பு வால்கள் தான் வழக்கமாக இருக்கும். இரண்டு வேலைகளையும் ஒரே வால்வில் செய்யக்கூடுமென்று கண்டுபிடித்து டிசைன் ஒன்றை 1935-ம் வருஷத்திலேயே தயாரித்தவரும் எனது அருமை நண்பருமான மிஸ்டர் பார்ட்டன் என்பவர் நாட்டிங்ஹாமில் வசித்து வருவதாக நினைவு. அவரைக் காண்பதற்கு உண்டான ஆவலில்தான் நான் அங்குபோய்ச் சேர்ந்தேன். நான் போனபிறகுதான் அவர் சில ஆண்டுகளுக்கு முன்னமேயே காலமாகிவிட்டார் என்ற வருந்தத்தக்க செய்தியை அவருடைய புதல்வர் எனக்கு அறிவித்தார். இவரும் ஒரு தொழிற்சாலையில் போர்மேனாக வாழ்க்கையைத் தொடங்கி முன்னேறி இப்போது நாட்டிங்ஹாம் ஜில்லா முழுமையும் ஓடிக்கொண்டிருக்கும் 300 மோட்டார் பஸ்களுக்கு உரிமையாளராக உயர்வடைந்திருப்பதுடன், வண்டிகளைப்பழுதுபார்க்கும் பல சாலைகளையும் நடத்துகிறார். பல்வேறு தொழில்களும் கூட இவரிடம் இருக்கின்றன.

அந்தக் குடும்பத்து நண்பர்களுடன் சல்லாபித்திருந்துவிட்டு அங்குள்ள ஆஸ்பத்திரி ஒன்றிற்குச் சென்றேன். கோவை பீளமேட்டிலிருந்து பயிற்சிக்காக வந்திருக்கும் பெண்மணி சரஸ்வதியை சந்திக்க எண்ணியிருந்தேன். நான் போன சமயத்தில் அவருக்கு ஓய்வு நாளாகையாலும் ஆஸ்பத்திரிக்கு வெளியே எங்கேயோ தொலை தூரத்தில் அவர் வசிப்பதாக அறிந்ததனாலும் அவரைக்காண இயலவில்லை. எனினும் அவருக்கு ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டுப் போனேன். அதற்கு உடனே பதிலும் கிடைத்தது. மறுமுறை ஒருவேளை சென்றால்

(10-ம் பக்கம் பார்க்க)

★ முன்பு சென்னை மாகாணப் போலீஸ் இலாகா தலைவராக இருந்த கன்னிங்ஹாம் தான்.

# மாயனூர் பள்ளிக்கூடம்

"மாயனூர் ஹரிஜனப் பள்ளிக்கூடத்தை சர்க்கார் எடுத்துக்கொண்டு நடத்த வேண்டும்" என்று சமீபத்தில் ஏதோ சமூக சீர்திருத்தச் சங்கமொன்று தீர்மானம் செய்திருப்பதாக வர்த்தமானப் பத்திரிகைகளில் படித்தபோது திடுக்கிட்டேன். அந்தப்பள்ளிக்கூடம் இப்போது நடைபெறவில்லை என்ற உண்மையே அதன் பிறகு விசாரித்ததில் தெரிய வந்தது.

சமூக ஊழியர் மாயனூர் சாம்பசிவத்தை திருச்சி ஜில்லா வாசிகள் நன்கு அறிவார்கள். தாழ்த்தப்பட்ட மக்களின் சேவைக்காகவே வாழ்வை அர்ப்பணித்துவிட்ட அவருக்கு, இந்தப்பள்ளிக்கூடம் நிறுத்தப்பட்டதைப் போன்ற கொடிய அவமதிப்பு வேறு இருக்க முடியாது.

கோபால கிருஷ்ண கோகலே அவர்கள் மிகவும் அடக்கமான மிதவாத அடிப்படையில் வெள்ளையருடன் நட்புரிமை பூண்டே இந்தியாவின் மறுமலர்ச்சிக்கு உழைக்க முடியுமென்று நம்பிய சரித்திர நாயகர். அவர் தோற்றுவித்த இயக்கம்தான் இந்திய ஊழியர் சங்கம். வேறு சொந்த நல உரிமைகளைப்பற்றிய பொறுப்புக்களைக் களைந்து விட்டு நாட்டின் உயர்வுக்கென்று வாழ்வின் முழு நேரத்தையும் செலவிடக்கூடிய தொண்டர்கள் தேவையென்று கருதினார். கற்றவர்களால்தான் இப்படிப்பெரும் நோக்கத்துடன் தொண்டு புரிய முடியுமென்ற நம்பிக்கையில் சர்வகலாசாலையில் பி.ஏ. பட்டம் பெற்றவர்களும் தங்கள் ஒருவரின் குறைந்த பட்ச வாழ்க்கைச் செலவுக்கான ஊதியம் மட்டும் எடுத்துக்கொண்டுஊழியம்பெற முன்வரக் கூடியவருமான ஒரு சிலரை மட்டுமே அவர் எதிர் பார்த்தார்.

இந்திய ஊழியர் சங்கம் தோன்றியபிறகு நாட்டில் பல்வேறு அரசியல் புரட்சிகளும் மாற்றங்களும் ஏற்பட்டு விட்டன. ஆயினும் இந்திய ஊழியர் சங்கம் ஒரு நிலைத்த ஸ்தாபனமாக வேரூன்றி தனக்கென்று வகுத்துக்கொண்ட வட்டத்திற்குள் இருந்து பணியாற்றி வருகிறது. இப்போது நாட்டில் அதன் வயதுக்கேற்ற பொருளாதார உடமைகளும் உடல் அலுங்காத ஊழியர் கூட்டமும் உண்டு. ஆரம்ப நாட்களில் 30, 40 என்று ஊதியக்கணக்கு இருந்தது இப்போது நூற்றுக்கணக்கில் அதுவும் உயர்ந்து விளங்குகிறது.

அகில இந்தியாவிலும் இந்த ஸ்தாபனத்தார்க்கு உரியதாக இருந்து வரும் ஒரே **கிராம சேவைக்கழகம்** மாயனூர் ஹரிஜனப் பாடசாலைதான்.

சங்க ஊழியர்களில் ஒருவராக இருந்து பின்னால் விலகி வேறு அரசியல் இயக்கத்தில் சேர்ந்து கொண்டுவிட்ட அன்பர் கே. ஜி. சிவஸ்வாமி என்பவர், திருச்சி மாவட்டத்தைச்சேர்ந்த குளித்தலைக்கு அருகாமையில் இந்த மாயனூர் கிராம நிலையத்தை தோற்றுவித்தார். சுமார் 20 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பெற்றது இது. வெள்ளச் சேதம் ஒன்று பெரியதாக ஏற்பட்டு இந்தப் பக்கத்து மக்கள் அல்லலுற்ற காலத்தில் நிவாரண வேலைகளை மேற்கொண்டு சிவஸ்வாமி இங்கே வந்தார். உழைப்பில் சலியாத ஊக்கம் கொண்ட அவருடைய ஹரிஜனத்தொண்டின் ஆர்வமே மாயனூர் விவசாய தொழிற்பள்ளிக்கூடம். இதை இந்தப் பக்கத்து ஜனங்கள் **"காட்டுப் பள்ளிக்கூடம்"** என்றுதான் கூறுகிறார்கள்.

பொன்னி நதியின் மருங்கில் இயற்கையான சூழ்நிலையில் இந்த நிலையம் தோன்றியது. இந்நிலையத்தின் செயலாளராக அடி நாள் முதல் இன்று வரை பணிபுரிந்து வந்திருக்கும் அன்பர்தான் சாம்பசிவம்.

வார்தாதிட்ட அடிப்படையில் ஹரிஜனக்குழந்தைகளுக்கு விவசாய தொழில் திட்டக்கல்வி பயிற்றுவித்து வரும் இந்தப் பாடசாலை, சர்க்காரின் நன்கொடைகளையும் பெருமக்களின் நன்கொடைகளையும் பெற்று வளர்ந்து வந்திருக்கிறது. பள்ளிக்கூடத்திற்காக விஸ்தாரமான இடமும் கட்டிடங்களும் உண்டு. பதினாயிரக் கணக்கில் இன்று இவற்றின் கிரயமதிப்பு இருக்கிறது.

காவேரிப்படுகையில் சில ஏகராக்களை அதிக உணவு உற்பத்தித் திட்டத்தின் கீழ் இந்தப் பாடசாலையின் பெயரால் எடுத்துக்கொண்டு அரும்பாடுபட்டுப் பயிரேற்றி அதன் விளைவையும் பாடசாலைக்குப் பயன்படுத்தி



மாயனூர் சாம்பசிவம்.

ஆண்டுதோறும் மாணவர்களைத் தயாரித்து வெளியே அனுப்பி ஆளாக்கியிருக்கிறார்கள்.

இந்தக் கிராம நிலையத்தில் பயின்று வரும் மாணவர்களுக்கும் உழைக்கும் ஆசிரியர்களுக்கும் ஒருங்கே பேரதிர்ச்சிதரக் கூடிய முறையில், இந்த நிலயத்தைக் கலைத்துவிட்டு சொத்து சுதந்திரங்களை யெல்லாம் விற்று எடுத்துக் கொண்டு போய்விட இந்திய ஊழியர் சங்கம் சென்ற ஆண்டில்முடிவுசெய்துவிட்டது.

சாம்பசிவமும் அவரது துணைவர்களான ஆசிரியர்களும் ஓய்ந்து போயிருக்கிறார்கள். பாடசாலை மூடப்பட்டுக் கிடக்கிறது. நிலத்தையும் மற்றபொருளையும் காசாக்கிக்கொண்டுபோவதில் இந்திய ஊழியர் சங்கம் முனைந்திருக்கிறது. இவ்வளவு உடமைகளும் மக்கள் கொடுத்த நன்கொடைகள். குறிப்பிட்ட தொண்டுக்கென்றே வழங்கப் பெற்றவை. இவற்றை இஷ்டம் போல் விற்றுக் கொண்டுபோகவோ, குறிப்பிட்ட சேவையை நிறுத்திவிடவோ இந்திய ஊழியர் சங்கத்துக்கு உள்ள உரிமை மிகவும்கேள்விக்கிடமானதாகும். சர்க்காருக்கு இந்தப் பள்ளிக்கூடத்தை விற்றுவிட சங்கத்தார் முயற்சித் திருக்கிறார்கள். பின்னர் விஷயம் அறிந்தவர்களின் தலையீட்டில் அதுவும் நின்று போய் இருக்கிறது. நிலையம் சங்கத்துக்கு உரியதேயானாலும், நிலையத்திற்கு சேர்ந்திருக்கும் சொத்துக்கள் குறிப்பிட்ட நோக்கத்திற்காகப்பொதுமக்கள் வழங்கியவை. எனவே இதை மாற்றிவிட முயற்சிப்பதை அனுமதிப்பது சரியல்ல.

ஹரிஜன இயக்கத்தில் இந்திய ஊழியர் சங்கத்துக்கு சிரத்தையில்லையென்றால் அதைச் செய்ய முன் வருவோரிடம் விட்டுவிட்டுப்பின்வாங்கிக்கொள்ளலாமேயல்லாது தர்மத்திற்கு என்று வசூல் செய்துவிட்டு அதை விற்று முடிந்து கொள்ள முயற்சிப்பது சரியல்ல.

இந்தப்பக்கத்தில் சிறப்பாக நடந்துகொண்டிருந்தபாடசாலையை மூடியது மிகவும் அநீதம். சென்னை அரசாங்கத்தார், இந்த நிலையத்தைக் கைப்பற்றி ஹரிஜனத்தொண்டு தொடர்ந்து நடைபெறும்படிசெய்யக்கடவர். இல்லையானால்நன்கொடைகொடுத்தபெருமக்கள் இந்திய ஊழியர் சங்கத்தின் செயலை எதிர்த்து நீதிபெற முன்வரக் கடவர்.

---

## லண்டனில் பண்டித நேரு பிறந்த தின கொண்டாட்டம்

இந்தியப் பிரதமர் பண்டித நேருவின் 61வது பிறந்த தினத்தையொட்டி லண்டனிலுள்ள இந்திய லீக் ஒரு பாராட்டுக்கூட்டம் நடத்தியது. அதுபோது பல பிரமுகர்கள் பண்டித நேருவின் சேவையை பாராட்டிப் பேசினர். இக் கூட்டத்திற்கு இந்திய ஹைகமிஷனர். லிபரல் கட்சித் தலைவரான கிளமண்ட் டேவிஸ். லார்டு பெதிக் லாரன்ஸ் ஜூலியஸ் ஸில்வர்பேன், ஸ்ரீ ரெஜினால்ட் ஸோரன்சன். டாக்டர் பி. வி. கேஸ்கார். ஹரீந்திரநாத் சட்டோபாத்தியாய ஆகியோர் வந்திருந்தனர்

இந்திய சரித்திரத்தில் தற்போது ஆரம்பமாகியுள்ள புதிய கஷ்டமான சகாப்தத்தைக் குறிப்பிட்டு திரு. கிளமண்ட் டேவிஸ் பேசுகையில் "இன்றைய உலக நிலைமையில் உலக முழுவதின் மதிப்புக்கும், கௌரவத்திற்கும் பாத்திரமாகியுள்ள ஒருவரை இந்தியா தலைவராக பெற்றுள்ளது அதன் பாக்கியமே பாக்கியம்: மனித சமுதாயத்திற்கு சேவை செய்யவேண்டுமென ஆசைகொண்டுள்ளது முற்றிலும் தகும்" என்றார்.

அடுத்தபடியாக ஸ்ரீ ரெஜினல்ட் ஸோரன்சன் பேசுகையில் கூறியதாவது; "பண்டித நேரு பெரிய இந்திய அரசியல் பிரமுகர் மட்டுமல்ல; அவர் ஒரு உலக புருஷர்; உலகம் சமாதானப் பாதையில் செல்ல அவர் வழிகாட்டியும் வருகிறார். மனித சமுதாயத்திற்கு அவர் ஆற்றியுள்ள சேவைக்காக நாம் அவருக்கு அஞ்சலி செய்கிறோம். ஜவஹர்லால் நேரு இந்தியாவின் நலனுக்காக தனது சகலவற்றையும் அர்ப்பணித்துள்ளார்; அவர் ஒரு அரசியல் பிரமுகர் மட்டுமல்ல; சமுதாயத்தன்மை பூரணமாகக் கொண்ட உண்மையான மனிதர் அவர்" என்றார் ஸோரன்ஸன்.

கல்யாண காலம்! கைராசி!! நாணயம்!!!
பட்டு, நூல் சேலைகள்
ஜங்கிளா, பனாரஸ்
பட்டுப் புடவைகள்
மிகவும் நூதனமாா்
டர்களில் கிடைக்கும்
M.N.நாகேந்திரம் சன்ஸ்
மலைவாசல்
தெப்பக்குளம். P.O., திருச்சி.

ஒமேகா, டிஸ்ஸோ, மெரிடியன், மேயர்
கைக்கெடியாரங்களுக்கு
ஏஜண்ட்ஸ்:-
S. நூர் & சன்ஸ், பெரியபஜார், திருச்சி




மேம்பாடடையாத நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கான சில திட்டங்கள் ஐ. நா. பொது சபையில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இவை ஐ. நா. பொருளாதார கமிட்டியால் சிபார்சு செய்யப்பட்டு முக்கியமானவை என கருதப்பட்டவை.

பொருளாதார முன்னேற்றத்திற்காக ஐ. நா. வின் வழக்கமான தொழில் நுணுக்க உதவியும், அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமனின் நான்கு அம்சத் திட்டங்களுடனும் சேர்ந்து கூட்டாக உதவியளிக்கும் ஒரு தீர்மானமும் நிறைவேற்றியது. அமெரிக்காவின் நான்கு அம்சத்தின் கீழ் 20 மிலியன் டாலர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது ஐ. நா. வின் வழக்கமான மான்யத் தொகைக்கு சம்பந்தமில்லாதது. மற்ற தீர்மானங்கள் வருமாறு:

மேம்பாடடையாத நாடுகளில் வெளிநாட்டு மூலதனத்தை உபயோகித்து உதவி செய்வதும்; நிலச் சீர்திருத்தமும், வறட்சியான பிரதேசங்களைச் சார்ந்த விஷயங்கள்; மேம்பாடடையாத நாடுகளில் தேசிய வரவு செலவைக் கவனிப்பது; அந்நாடுகளில் முக்கியமாக ஏற்றுமதி இறக்குமதி விஷயங்களில் திட்டங்கள் வகுப்பது இவைகளாகும். — (யுஸிஸ்)

ஃ ஃ ஃ ஃ

"கீழ்கோடியில் சமாதான முறையில் தேசிய சுதந்திரம் பரவுவதைக் கண்டு ரஷ்யா பயப்படுகிறது. தன் ஆதிக்கத்தை பிரயோகிக்க முடியாததால் மேலும் அச்சமுறுகிற" தென்று ஐ. நா. ஜெனரல் அசெம்பிளியில் அமெரிக்க பிரதிநிதி ஜான் பாஸ்டர் டல்லஸ் கூறினார்.

அசெம்பிளியின் அரசியல் கமிட்டியில் பேசும் பொழுது சமாதான முறையில் அரசியல் மாற்றம் ஏற்படுவது, ரஷ்யாவின் கொடிய புரட்சி முறைக்கு முரணாக இருக்கிறதென்றார். 1945-வருஷம் தன்னைத்தானே ஆளாத எட்டு தேசத்தைச் சேர்ந்த 500 மிலியன் ஜனங்கள் சமாதான முறையில் இன்று சுதந்திர மடைந்திருக்கிறார்கள்.

ரஷ்யாவின் ஆக்கிரமிப்பை எதிர்த்து உண்மை தகவல்களை சேகரித்து வெளியிட ஒரு கமிஷன் நிறுவ வேண்டும் என்று தேசிய சீனா கொண்டு வந்த ஒரு குறிப்பின் மேல் பேசுகையில் டல்லஸ் இவ்வாறு கூறினார். 1645-ம் ஆண்டிலேயே சைனா தன் உள்நாட்டில் சீர்திருத்தங்கள் செய்து உலகில் ஸ்திரமான அரசாங்கம் ஆகியிருக்கலாம். சோவியத் தலைவர்கள் அப்படிச் செய்யாது தடுத்து விட்டார்கள். என்று அவர் மேலும் தெரிவித்தார். —(யுஸிஸ்)

ஃ ஃ ஃ ஃ

அமெரிக்க தொழிற்சங்க காங்கிரஸின் வருஷாந்திர மகாநாட்டின் ஆரம்பத்தில் ஸ்ரீ ட்ரூமன் அனுப்பிய வாழ்த்துச் செய்தியில் உலகில் உண்மையான ஜனநாயகத்தின் செய்தியைப் பரப்புவதில் உங்கள் கழகம் அதிக முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறது. வருங்காலத்தில் அதிக பணியை செய்து வரவேண்டும் என கூறியிருக்கிறார். மேலும் அவர் கூறியிருப்பதாவது :

அயல் நாடுகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் நன்கு முன்னேற்றமடைய வேண்டுமானால் சுதந்திரமுள்ள தொழில் கழகங்கள் தான் முக்கியமானது. அம்மாதிரியான கழகங்களால் தான் மனித வர்க்கம் சுதந்திரமடையப்பாடு பட முடியும். இதை அமெரிக்க தொழிற்சங்க காங்கிரஸ் தன்னுடைய உதாரணத்தால் உலகுக்கு நிரூபிக்கிறது.

அயல் நாடுகளுக்கான அமெரிக்க உதவியைப் பற்றிக் குறிப்பிடுகையில் பிற நாடுகளில் கம்யூனிஸ்ட் ராணுவ பயத்தைப் போக்க மட்டும் உதவுவதோடல்லாமல், உள்நாட்டு குழப்பமும் ஏற்படாமல் இருக்க நாம் உதவி செய்ய வேண்டும். மேம்பாடடையாத நாடுகளில் நெடுநாட்களாகச் சிறைப்பட்டுக் கிடைக்கும் ஏழ்மை, வியாதி, கொடுமை இவைகளை விடுவித்து சுதந்திரமடையச் செய்ய கம்யூனிஸத்தால் முடியாது என்பதை நாம் நிரூபணம் செய்ய வேண்டும். தவிர சமூக முன்னேற்றம், நல்ல கல்வி, சுகாதாரம் முதலியவைகளில் முன்னேற்றமடையவும். நிறவேற்றுமை ஒழிந்து தொழிலியலில், தொழிலாளி—முதலாளி கூட்டுறவுகள் ஏற்பட வேண்டும் என்று குறிப்பிட்டிருந்தார்.

ஃ ஃ ஃ ஃ

அமெரிக்க உலக நல்லுறவு கமிட்டியின் ஆதரவில் நடைபெறும் கண்காட்சியில் இந்திய பள்ளிக்குழந்தைகளின் சித்திரங்களும் இடம் பெறும். இன்று ஆரம்பமாகும் இக் கண்காட்சியில் இந்தியாவைச் சேர்த்து உலகில் 21 நாடுகள் பங்கெடுத்துக் கொள்கின்றன. — (யுஸிஸ்)

ஃ ஃ ஃ ஃ

உலகப்பிரசித்தி பெற்ற நான்கு எழுத்தாளர்களை கௌரவ அங்கத்தினர்களாக அமெரிக்க கலை இலக்கிய கழகம் தேர்ந்தெடுத்திருக்கிறது இதில் பண்டித நேருவும் ஒருவராவர்.

கழகத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட மற்ற மூவர் :—

ப்ரிட்டிஷ சரித்திராசிரியர் ஸ்ரீ ஆர்நாட் ஜெ. டாயன்பீ; பிரெஞ்சு நாவலாசிரியரும் கட்டுரையாளருமான ஆண்ட்ரு கைட்; இத்தாலி நாவலாசிரியர் இக்னேஜியோ ஸிலோனே.

உலக நாடுகளனைத்திலுமுள்ள கலைகளில் வல்லுனர்களை அங்கீகரிப்பதன்மூலம் கலாசார ஐக்கியத்தைப் பலப்படுத்தி வளர்ப்பதே இக் கழகத்தின் கொள்கையாகும். — (யுஸிஸ்)

ஃ ஃ ஃ ஃ

உலக தொழில் ஸ்தாபனத்தின் முதல் ஆசிய தொழில் நுணுக்க உதவி மகாநாடு கராச்சியில் வரும் டிசம்பர் 26-ந் தேதி முதல் ஜனவரி 2-ந் தேதி நடக்க விருக்கிறது. இதில் கூட்டுறவு மூலம், லக்ஷக்கணக்கண சிறு ஆசிய உற்பத்தியாளர்களுக்கு உதவக் கூடிய சில திட்டங்கள் பரிசீலிக்கப்படும்.

ஆசியாவின் முக்கிய நாடுகளிலிருந்து பல நிபுணர்கள் இம் மகாநாட்டில் கலந்து கொள்வார்கள் என்று ஜினிவாவிலிருக்கும் தலைமைக் காரியாலயம் அறிவிக்கிறது.

உலக தொழில் ஸ்தாபனத்தின் டைரக்டர் ஜெனரல் ஸ்ரீ டேவிட் ஏ. மோர்ஸ் மகாநாட்டுக்காக தயாரித்திருக்கும் ஒரு ரிப்போர்ட்டில் முதலீடு இல்லாது கூட்டுறவு சங்கம் அமைக்க, இயங்க, பிரதிநிதித்துவ நாடுகளுக்கு "குறிப்புகளும் யோஜனைகளும்" குறிப்பிட்டிருக்கிறார்.

உலக தொழில் ஸ்தாபனம் ஏற்கனவேயே கூட்டுறவின் நிமித்தம் இந்தியா, பர்மா, இலங்கை, இரான், மொராக்கோ, தாய்லாந்து துருக்கி ஆகிய நாடுகளுக்கு தூது கோஷ்டிகளை அனுப்பியிருக்கிறது. — (யுஸிஸ்)

ஃ ஃ ஃ ஃ

அமெரிக்கா, இங்கிலாந்து, கானடா ஆகிய தேசங்களுக்குள் ஏற்பட்டுள்ள ஒரு ஒப்பந்தப்படி அணுசக்தி பற்றிய சில குறிப்புகள் பிரசுரமாகும். சமாதான காலங்களில் பிரயோஜனப்படும் சில ஆராய்ச்சி கருவிகளை அமைப்பதற்கும், அவைகளை உபயோகப்படுத்துவதற்கும் இக்குறிப்புகள் ஆதாரமாகவிருக்கும்.

இந்த அணுசக்தி விவரங்களைக் கொண்டு சமாதான காரியங்களுக்கு பிரயோஜனப்படுத்த முடியுமே ஒழிய யுத்தத்திற்கான அணுகுண்டு சாதனங்கள் செய்ய இயலாது. —(யுஸிஸ்)



"எனது ஹாஸ்டலில் ஞாயிற்றுக்கிழமையானது பாலுட்ரின் கிழமை........

ஒரு நாளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் 3 நாட்கள் உட்கொண்டால் மலேரியா குணமாகிவிடும். வாரம் ஒரு மாத்திரை சாப்பிட்டால் மலேரியா புதியதாக தொத்திக் கொள்ளாமல் தடுக்கலாம். இது உண்மை என்பது எங்களுக்கெல்லாம் தெரியும். ஆனால் தேகசுகம் நன்றாயிருக்கும் போது வாராவாரம் மாத்திரை சாப்பிடுவதை மறந்துவிடுவதும் இயல்பே. ஆகவே என் ஹாஸ்டலில் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் காலையில் எல்லாருமாகச் சேர்ந்து பாலுட்ரின் சாப்பிடுகிறோம்."

ஒரு நாளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை விகிதம் (ஆகாரத்திற்குப் பிறகு தண்ணீருடன்) 3 நாட்கள் உட்கொண்டால் சாதாரணமாக மலேரியா பாதிப்பு அகலும். வாரம் ஒரு மாத்திரை விகிதம் உட்கொள்ளுவதனால் புதியதாக மலேரியா தொத்துவதினின்றும் தடுக்கச் செய்யும். பின்னிட்டு நேரிடும் விரும்பத்தகாத கோளாறுகள் ஏதும் இல்லாதது 'பாலுட்ரின்'. சிறுவர்கள், வயோதிகர்கள், கர்ப்பிணி ஸ்திரீகள் யாவரும் முழு நம்பிக்கையுடன் உட்கொள்ளலாம். ஒரு மாத்திரை விலை ஒரு அணா. 'பாலுட்ரின்' 8 அணாவுக்கு 8 மாத்திரைகள் அடங்கிய தாள்களில் கிடைக்கும்.

'பாலுட்ரின்'

மலேரியாவுக்கு அற்புதமான ஔஷதம்.

குணத்தின் ICI சின்னம்

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்,

கல்கத்தா பம்பாய் சென்னை கோச்சி புதுடில்லி கான்பூர்.

ICX-4 TM




அறவலி காத்துநாளும் அன்னையின் பணிக்கென்றே—நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினோம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி 3-12-50

# தண்ணீர்த் தாகம்

திருநெல்வேலி ஜில்லாவில் "மணிமுத்தாறு நீர்த்தேக்கம்" என்பது பற்றி அடிக்கடி பத்திரிகைகளில் அடிபடுகிறது. அதைப்போல எல்லா இடங்களிலும்செய்யவேண்டுமென்று பேசுகிறார்கள். இதைக்கொஞ்சம் இன்னதென்று தெரிந்துகொள்ள வேண்டியதுதானே!

தாமிரவருணி என்னும் பெரிய நதி திருநெல்வேலி ஜில்லாவில் பாய்கிறது. விளைவிக்கக்கூடிய நிலப்பரப்பு பெரிதாக இருந்தும் போதிய தண்ணீர் பருவத்தில் தங்கியிருப்பதில்லை. அதனால் தரிசு ஏராளமாகக் கிடக்கிறது. எனவே மனித முயற்சியில் எதாவது செய்தால் பயன்தருமா என்ற ஆராய்ச்சி உண்டாயிற்று. மனம் வைத்தால் முடியாதது இல்லை என்ற அடிப்படையில் இதற்குக் கண்டு பிடிக்கப்பட்ட திட்டம்தான் மணிமுத்தாறு நீர்த்தேக்கத் திட்டம்.

தாமிரவருணியில் வந்து கலக்கும் உபநதிதான் மணிமுத்தாறு. இந்த சங்கமத்துக்கு மேலே மூன்றுவது மைலில் பெரிய அணை எழுப்பி நீரைத்தேக்கி வேண்டியபடி உபயோகிப்பது இந்த திட்டம். சர்க்கார் பணமில்லையென்று இதை ஒத்திப்போடாமல் இருக்கவேண்டுமே யென்றுதான் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்த பொதுமக்கள் தாங்களாகவே ஒரு கோடிரூபாய் வசூல் செய்து இதை நடத்திவைப்பதற்கு மூலதனமாக சர்க்காருக்குக் கடன் கொடுத்திருக்கிறார்கள். நல்ல யோசனையல்லவா? சென்னை மந்திரி சபையினர் சமீபகாலத்தில் செய்த மகத்தான காரியமொன்றைச் சொல்லவேண்டுமானால் இதைத்தான் கூறவேண்டும்.

இந்தமாதிரிப் பெரிய திட்டங்களை மட்டுமின்றிச் சிறிய அளவில் பாசன வசதிகளை ஏற்படுத்துவதன்மூலம்தான் உணவு நெருக்கடியை நாம் போக்கலாம். எல்லா இடங்களிலும் இம்மாதிரிப் பல திட்டங்கள் தோன்றினால் பொதுமக்கள் மகிழ்ச்சியுடனும் ஆசையுடனும் முன்வந்து வேலைசெய்வார்கள். மற்ற இடங்களில் கிணறு வெட்டுவதற்கு மான்யங்கள் கொடுத்துப்பார்த்ததுண்டு. நிர்வாக சக்கரம் சரியாக வேலைசெய்யாத காரணத்தால் சர்க்காரின் நல்லெண்ணம் நிறைவேறாமல் கிணறுவெட்டும் வேலை பெரும்பாலும் ஊழலாகவே முடிந்துவிட்டது. ஏற்பட்ட பயன் எடுத்துக்கொண்ட முயற்சிக்கும் செலவிட்ட தொகைக்கும் ஏற்றதாக இல்லையென்பதைத்தான் குறிப்பிடுகிறோம்.

"தினமணி" பத்திரிகையின் 29-11-50 தலையங்கத்தில் ஒரு நல்ல கருத்தை இது சம்பந்தமாக வெளியிட்டிருக்கிறார்கள். அதாவது தண்ணீர் சப்ளை கம்பெனிகளை தனிப்பட்ட மனிதர்கள் தோற்றுவிக்க சர்க்கார் உதவி செய்வது. இது மிகவும் நல்ல யோசனை என்றே கருதுகிறோம். மின்சார சப்ளை கம்பெனிகளையும், பஸ் போக்குவரத்தையும் தனி மனிதர்களிடமிருந்து பறித்துக்கொள்ள சர்க்கார் முயற்சிக்கும் இந்த நாட்களில் புதிதாக தண்ணீர் சப்ளை கம்பெனிகளை ஆரம்பிக்க யாருக்காவது தைரியம் உண்டாகுமா என்பது ஒரு கேள்விதான். திட்டம் பயனுடையதாயிருக்கும்போலிருந்தால் ஏதாவது ஒரு குறைந்த கால வரையறைக்குள் சர்க்கார் தலையிடுவதில்லை என்ற வாக்குறுதியின்மீது தனிப்பட்டவர்கள் துணிந்து இறங்கும்படிசெய்யலாம். இதனால் நீர்ப்பாசன ஏற்பாட்டில் சர்க்கார் இலாகாக்களே திணறும்படியான சுமை குறையும். பெரிய குளங்களை வெட்டிக்கொண்டு சில ஆயிரம் ஏக்கர்களை நீர்ப்பாசனம்செய்து கொடுப்பதென்று திட்டம்போட்டு அந்த அளவுக்கு பொதுமக்களிடம் பங்கு சேர்த்துக் கம்பெனிகள் ஆரம்பிக்க வசதி செய்தால் உடனே பலன் தரக்கூடும். மின்சார சக்தி யூனிட்டுக்கு இவ்வளவு காசு ஆகும் என்பதுபோல பாசனத்துக்கும் இவ்வளவு சால் அல்லது காலன் தண்ணீருக்கு இவ்வளவு என்று குறிப்பிடலாம். அப்படி தண்ணீர் வாங்கிக்கொள்ள நிலச் சுவான்கள் இவ்வளவுபேர் முன்வரும்படி செய்யலாம் என்று சர்க்கார் உறுதிகொடுத்தால் இந்தமாதிரிக் கம்பெனிகள் தோன்ற முடியும். கூட்டுறவு முறையில் சொஸைடிகளாகவும் கூட இப்படிச்செய்யக்கூடுமல்லவா?

இந்த முறையில் திருச்சி ஜில்லாவில் தொடங்கப்பட்டிருக்கிற கன்னி முயற்சியை உதாரணமாகக் குறிப்பிடலாம் என்று தோன்றுகிறது. குளித்தலை தாலூகாவில் தியாகிகளுக்கு வீர மான்யம் வழங்கப்பட்ட நூறு ஏக்கருக்கும் அதிகமான நிலப்பரப்பில், தியாகிகள் கூட்டாகச் சேர்ந்து எஞ்சின்கள் ஒன்றையோ இரண்டையோ பொதுவில் விகிதாசாரப்படிப் பணம் போட்டு வாங்கி தங்கள் நிலங்களின் நீர்ப்பாசனத்துக்கு வசதி செய்துகொண்டிருக்கிறார்கள். இது சாதாரணமாக அர்த்தமாகக்கூடியதாயினும் பாசன வசதிக்கு நல்ல ஏற்பாடு. இந்த மாதிரி அடிப்படையில் இன்னும் விரிவான சிறு திட்டங்களில் சர்க்கார் கவனம் செலுத்தவேண்டும். நிலச்சுவான்கள் ஆங்காங்கு தாலூகா பிர்க்கா வாரியாக மகாநாடுகள்கூட்டி நீர்ப்பாசனத்துக்கு ஏதாவது திட்டங்கள் காண்பதற்கு இந்தமாதிரி அடக்கமான அளவில் வழிகண்டுபிடித்தால் சர்க்கார் உதவியைப் பெற வசதியாயிருக்குமல்லவா?

## ரயில் வண்டி சிப்பந்திகளின் சம்பளமும் அலவன்ஸுகளும்

ரயில்வண்டி சிப்பந்திகள்—அதாவது டிரைவர்கள், பயர்மென்கள், கார்டுகள் முதயவர்களின் சம்பளம், அலவன்ஸுகள் பற்றிய, மத்திய சம்பள கமிஷனின் சிபார்சுகளின் விளைவாக மற்ற பிரிவினர் விஷயத்தில் சப்பள விகிதங்கள் பொதுவாக மாற்றியமைக்கப்பட்டதை யொட்டி, நியாயமாக நிர்ணயிக்கப்படும் பொருட்டு, வெகு நாட்களாகவே பரிசீலனையில் இருந்து வந்தது.

ரயில் வண்டி சிப்பந்திகளில் பல்வேறு பிரிவினருக்கும், மத்திய சம்பளக் கமிஷனே அடிப்படையான சம்பள விகிதங்கள் சிலவற்றைச் சிபாரிசு செய்திருந்தது. ஆனால், அவர்களுடைய வருமானத்தில் முக்கியமான பகுதிபற்றி, அதாவது வண்டியில் வேலைசெய்யும்போது கொடுக்கப்படவேண்டிய அலவன்ஸுகள் பற்றி—திட்டமான யோசனை எதுவும் கூறாமல், அவ்வாறு கொடுக்கப்படும் சராசரி மாத அலவன்ஸ் 1946-ம் வருஷத்தில் அமுலில் இருந்த விதிகளின் பிரகாரம் அவர்களுக்குக் கிடைத்த தொகையைவிட அதிகமாக இருக்கக்கூடாது என்று மாத்திரம் கூறிவிட்டு, இது மேற்கொண்டு பரிசீலனை செய்யப்பட்ட பிறகு முடிவு செய்யப்படும்படியாக விட்டுவிட்டனர். இந்த சிப்பந்திகளின் மொத்த வருமானத்தில், வேலை அலவன்ஸுகளாகக் கருதப்படும் தொகையின் விகிதாசாரம் மாற்றப்பட வேண்டுமா என்ற விஷயம் சிலகாலமாக சர்க்காரின் பரிசீலனையில் இருந்து வந்தது.

மத்திய சம்பளக் கமிஷன் சுட்டிக்காட்டிய முறையில் இது பற்றி ஒரு முடிவு காண்பதன் பொருட்டு, அதிகாரிகள் கமிட்டி யொன்றை சர்க்கார் அமைத்தனர். இந்தக்கமிட்டி, அடிப்படைச் சம்தளம், வேலை அலவன்ஸுகள் ஆகிய இரண்டு விஷயங்களையுமே மீண்டும் பரிசீலனைசெய்து, சிப்பந்திகள், நிர்வாகம் ஆகிய இருதரப்பினரின் நியாயமான நலன்களைப் பாதுகாக்கும் வகையில் அடிப்படையான விகிதங்களைச் சிபாரிசு செய்தது. தொழிலாளர்கள் கருத்துக்களையும் அவர்களுடைய யூனியன்களின் கருத்துக்களையும் பரிசீலனை செய்த பிறகு இந்தக்கமிட்டி செய்துள்ள சிபாரிசுகளை, சில மாறுதல்களுடன் சர்க்கார் ஏற்றுக்கொண்டு அவற்றை நிறைவேற்றி வைத்தனர்.

ஆனால், சில நாட்களுக்கு முன்னர் சர்க்கார் நியமித்த கூட்டு ஆலோசனைக் கமிட்டி, வண்டி சிப்பந்திகளின் சம்பளம், அலவன்ஸுகள் விஷயத்தைப் பரிசீலனை செய்து சில சிபாரிசுகளைச் செய்தது. இந்த சிபாரிசுகள் சிப்பந்திகளின் வருமானத்தை அதிகப்படுத்துபவையாக இருந்தன. 'ஸி' கிரேட் டிரைவர்கள், 'ஸி' கிரேட் கார்டுகள், ஷன்டர்கள், பயர்மென்கள் ஆகியோரின் சம்பள விகிதங்களை உயர்த்துவது, பிரேக்ஸ்மென்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த சம்பள விகித்தை சரிபடுத்துவது, பெரும்பாலான சிப்பந்திகள் விஷயத்தில் வேலை அலவன்ஸு விகிதங்களை உயர்த்துவது, ஆகியவை அக்கமிட்டியின் சிபாரிசுகளில் அடங்கியிருந்தன. இந்தச் சிபாரிசுகளை யெல்லாம், சர்க்கார் மாறுதலின்றி அப்படியே ஏற்றுக்கொண்டு விட்டனர். இதனால், வருஷா வருஷம் சுமார் 20 லட்சரூபாய் அதிகமாகச் செலவாகுமென்று மதிப்பிடப்படுகிறது. ரயில்வே நிர்வாகம், தொழிலாளர் ஆகிய இருதரப்பினரின் நம்பிக்கைக்குப்பாத்திரமானவர் ஒருவரைத் தலைவராகக்கொண்டதும், தொழிலாளர் நிர்வாகம் இருசாராரின் பிரதிநிதிகளை அங்கத்தினராகக் கொண்டதுமான இந்தக் கூட்டுக்கமிட்டியின் சிபாரிசுகளை சர்க்கார் ஏற்றுக்கொண்டு விட்டபடியால், சிலகாலமாக இதுபற்றி நடைபெற்று வந்த சர்ச்சை இத்துடன் தீர்ந்து போனதாக ஒப்புக்கொள்ளப்பட்டு விடுமென்று சர்க்கார் நம்புகின்றனர்.

# நோபல் பரிசு பெற்ற பிரிட்டிஷ் தத்துவ ஞானி

[ஸ்ரீ. பெர்ட்ராண்ட் ரஸ்ஸல்]

ஸ்ரீ பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் உலகப்பிரசித்தி பெற்ற தத்துவஞானிகளுள் ஒருவர். ஏற்கனவேயே பல சிறந்த பரிசுகளும், கௌரவ பட்டங்களும் இவருக்கு அளிக்கப்பட்டதென்றாலும் பரிசுகளுக்கே உன்னத சிகரமாக விளங்கும் நோபல் பரிசு இவ்வருடம் இவருக்கு வழங்கப்பட்டுள்ளது. இவர் பல்வகைப்பட்ட அநேக ஆய்வுரை கட்டுரைகளும், புத்தகங்களும் எழுதியுள்ளார். அவற்றில் சுமார் 40 புத்தகங்களுக்குமேல் சமூக, அரசியல் விஷயங்கள் சம்பந்தப்பட்டவை. "வேதாந்தப் பிரச்னைகள்,, "சமூக புனர் நிர்மாண கொள்கைகள்". "சமாதானத்திற்கு வழி எது", மேற்கத்திய வேதாந்தத்தின் சரிதம்", "கல்வி", "போல்ஷிவிஸம்—கொள்கையும், செய்முறையும்", "சீனப்பிரச்னை" என்பவை ஒரு சில முக்கியமானவையாகும்.

தமக்கே உரித்தான தனிப்பட்ட சுயேச்சை மனப்பான்மைக்கு சரித்திர பிரசித்தமான குடும்ப பரம்பரையில் உதித்தவர் ஸ்ரீ பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் இவர் பெயர்பெற்ற ராஜதந்திரியாகிய ஜான் ரஸ்ஸல் பிரபுவுக்கு பேரனாவார். 1872-ம் ஆண்டில் இவர் பிறந்தார். சிறு பிராயத்திலிருந்தே பள்ளியில் சேர்ந்து படிக்காத தோஷத்தினாலும், இல்லத்திலேயே பல உபாத்தியாயர்கள் வைத்து கல்வி கற்றதாலும் இவர் ஏகாந்த வாழ்க்கையின் இனிமையிலே வளர்ந்தவர். மதியுக்த விஷயங்களில், முக்கியமாக கணித சாத்திரத்தில், மூழ்கி திளைத்தவர்.

"கணித உண்மைகளை மனப்பூர்வமாக நம்பவேண்டுமென்ற ஆர்வமே என்னைவேதாந்தத்தில் மனம் செலுத்தும்படி தூண்டியது" என்று உரைத்துள்ளார் ரஸ்ஸல்.

ரஸ்ஸல் தம் 18-ம் வயதில் கேம்பிரிஜ் பல்கலைக் கழகத்திற்குச் சென்று அங்கு கணிதமும், வேதாந்தமும் பயின்றார். அப்போதிருந்தே தர்க்க சாத்திரம் கணிதம் ஆகியவற்றில் பல போற்றத்தக்க புத்தகங்கள் எழுதத் தொடங்கினர் பின்னர் ட்ரினிடி கல்லூரியில் ஆசிரியராக அமர்ந்தார். இதே சமயத்தில் பேபியன் ஸொஸைட்டியின் பிரதான அங்கத்தினராகவும் இருந்தார். 1908-ம் வருடத்தில் ரஸ்ஸலுக்கு 36 வயதாகும்போது இராயல் கழகத்தின் "பெல்லோ"வாக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### மிக்க முக்கியமான வருடம்

1900-ம் வருடத்தை தன் வித்வத் வாழ்க்கையில் மிக்க முக்கியமான வருடமாகக் கருதுகிறார் ஸ்ரீ ரஸ்ஸல் ஏனெனில் இவ்வருடத்தில்தான் பாரிஸ் நகரில் நடைபெற்ற சர்வதேச வேதாந்த மகாநாட்டில் ரஸ்ஸல் கலந்துகொண்டபோது இத்தாலிய கணித பேராசிரியரான குஸெபே பியானோ என்பவரின் ஆற்றல்களைப்பற்றி கேள்வியுற்றார். பியானோவின் அரிய சித்தாந்த முடிவுகளை படித்ததன் பயனாய 1903-ம் ஆண்டில் ரஸ்ஸல் "கணித சாத்திரத்தின் மூலாங்கங்கள்" என்ற ஒரு ஆராய்ச்சி உரையை எழுதி வெளியிட நேர்ந்தது. இதையே மேலும் விரிவாகவும் நுணுக்கமாகவும் விளக்கி மற்றொரு புத்தகத்தை (1910—1913) ஆல்ப்ரெட் நார்த் ஒயிட் ஹெட் என்பவருடன் சேர்ந்து வெளியிட்டார் இந்த இரண்டாவது வெளியீடு இந்நூற்றாண்டில் மஹோன்னத சித்தாந்த ஆற்றல்களில் ஒன்று என யாவராலும் புகழப்பட்டது. கணித சாத்திரத்திற்கு மட்டும் அது ஒரு சீரிய மேற்கோளாக இருப்பதுமல்லாமல் தர்க்க சாத்திர சரித்திரத்திலும் ஒரு உன்னத சின்னமாகவும் விளங்குகிறது.

ஜெர்மனியில் நாஜிகள் எழுச்சியுறும்வரை ரஸ்ஸல் முழுக்க முழுக்க ஒரு தீவிர சமாதான வாதியாக இருந்தார். முதல் உலக மஹாயுத்தத்தின் போது கட்டாய ராணுவ சேர்ப்பை ஆர்வமாக எதிர்த்து பன்முறை அதிகார வர்க்கங்களுடன் நேரடியாக சர்ச்சைகள் செய்து தாக்கினார். இதைப்போல் 1940-ம் வருடத்தில் நியூ யார்க் நகர கல்லூரியில் பேராசிரியர் பதவியேற்றபோது இவருடைய முற்போக்கான சமூகக் கொள்கைகள், குறிப்பாக இவர் எழுதிய "திருமணமும் ஒழுக்கங்களும்" என்ற புத்தகம் அவ்விடத்து வைதிக வட்டாரங்களில் த்வேஷ கிளர்ச்சியை மூளுவித்தது. அதனால் அவருடைய உத்தியோகத்திற்கு சீட்டு கிழிக்கப்பட்டது. ஆனால் நியூ யார்க் ஸுப்ரீம் கோர்ட் ரஸ்ஸல் சாதகமாகவே தீர்ப்பளித்தது

தர்க்க ரீதியில் வேதாந்த பிரச்னைகளை ஆராயும் வல்லமையில் ஸ்ரீ ரஸ்ஸல் நிகரற்றவர் அவருக்கு ஏற்கனவேயே பல கௌரவங்கள் வழங்கப்பட்டுள்ளன. 1934-ம் வருடம் இராயல் கழகத்தாரின் ஸில்வெஸ்டர் பதக்கமும், இராயல் கணித ஸொஸைட்டியாரின் டி மார்கன் பதக்கமும், 1949-ம் ஆண்டில் அரசர் பிறந்த தின பட்டமளிப்பில் 'ஆர்டர் ஆப் மெரிட்' என்ற பிந்தும் அளிக்கப்பட்டுள்ளன. இவ்வருடம் நோபல் பரிசு பெற்றிருக்கிறார்.


## பார்லி வாட்டரும், கஞ்சியும் இவ்விதம் சுலபமாகத் தயாரிக்கலாம்




**பார்லி வாட்டர்:** பியூரிடி பார்லி இரண்டு டீஸ்பூன் மட்டத்திற்கு எடுத்துக்கொண்டு சிறிது ஜலம் சேர்த்துக் கலந்து ஒரு பைன்ட் ஜலம் விட்டு ஐந்து நிமிஷம் கொதிக்கவிடவும். பிறகு ருசிக்குத்தக்கபடி உப்பு, சர்க்கரை அல்லது எலுமிச்சம்பழ ரஸம் சேர்க்கவும்.

**கஞ்சி:** இதைவழக்கம் போலத் தயாரிக்கவும், ஆனல் தயாரிக்க இருபது நிமிஷ நேரம் தான் ஆகும். ஒரு ஸ்பூன் பியூரிடி பார்லி எட்டு ஸ்பூன் சாதாரண பார்லி அரிசிக்கு சமம் என்பது ஞாபகமிருக்கட்டும்.

## பியூரிடி பார்லி

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட், தபால் பெட்டி 664, கல்கத்தா.

APBK 7 TI


### கவிஞர்பிரான் மணி விழா

தமிழகத்தின் தன்னேரில்லாத் தனிப்பெருங் கவிஞர் பாரதிதாஸன் அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு 1951—ஏப்ரல் 29ம் நாளில் வருகிறது.

இதனையொட்டி மணி விழாவைச் சிறப்புறக் கொண்டாடும் பொருட்டாக விழா செயற் குழுவை அமைப்பவற்கும் திட்டங்கள் காண்பதற்கும் நாளது 10-12-50 ல் திருச்சி மணியக்காரத்தெருவில் திரு. கி. ஆ. பெ. விஸ்வநாதம் அவர்கள் இல்லத்தில் தமிழன்பர் கூட்டம் ஒன்று நடைபெறும். இச்செய்தியை மதுரையில் முன்னர் தோற்றுவிக்கப்பட்ட "பாரதிதாசன் மணிவிழா—தாற்காலிகச் செயற்குழுவினர்" அறிவித்திருக்கின்றனர்.

தமிழ் அன்பர்கள் மணி விழாவை சிறப்பாகக் கொண்டாட முன்வருவார்களாக.

—ஆசிரியர்.

### துருக்கி சர்வகலாசாலையில் படிக்க இந்திய மாணவருக்கு உபகாரச் சம்பளம்

துருக்கியிலுள்ள சர்வ கலாசாலையொன்றில் அடுத்த வருஷ ஆரம்பத்திலிருந்து இரண்டு வருஷ காலத்துக்குச் சேர்ந்து படிக்க இந்திய மாணவர் ஒருவருக்கு உபகாரச் சம்பளம் அளிக்க துருக்கி சர்க்கார் முன்வந்திருக்கின்றனர். மாதம் ஒன்றுக்கு 117·60 துருக்கி பவுன் (இருநூறு ரூபாய்க்குச் சமம்) வீதம் இந்த உபகாரச் சம்பளம் அளிக்கப்படும். உபகாரச் சம்பளம் பெறுபவர் கலாசாலைச் சம்பளமும் பரீட்சைக் கட்டணமும் செலுத்த வேண்டியதில்லை. உபகாரச் சம்பளம் பெறுபவர் கலாசாலைச் சம்பளமும் பரீட்சை கட்டணமும் செலுத்த வேண்டியதில்லை. உபகாரச் சம்பளம் பெறுபவர் துருக்கி போய் வரப் பிரயாணச் செலவையும், வைத்திய செலவுகள் உட்பட இதர செலவுகளையும் தாமே ஏற்றுக் கொள்ளவேண்டும்.

இந்தியாவிலிருந்து செல்லும் மாணவர் துருக்கி பாஷை, இலக்கியம், சரித்திரம், வேதாந்தம் ஆகிய பாடங்களை எடுத்துக் கொள்ளலாம். இந்த உபகாரச் சம்பளம் பற்றிய முழு விவரங்களையும், இதற்கென நிர்ணயிக்கப்பட்டுள்ள விண்ணப்ப நமூனாக்களையும், சம்பந்தப் பட்ட சர்வ கலாசாலைக்கோ, மத்திய கல்வி மந்திரி காரியாலயத்துக்கோ எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

பிரிட்டிஷ் பார்வை

# பொதுத் தேர்தல்

இந்தியப் பிரச்னைகள்

[இந்திய நாட்டின் பிரச்னைகளைப்பற்றிப் பிரிட்டிஷாரின் கருத்துக்கள் இந்தப் பகுதியில் தரப்படுகின்றன. பிரிட்டிஷ் செய்தி இலாகாவின் டெல்லி அலுவலகத்தார் நமக்கு அனுப்பும் குறிப்புக்களிலுமிருந்து இவை தொகுக்கப்படுகின்றன.]

இந்தியப் பொதுத் தேர்தல்களை 1951, நவம்பர், டிஸம்பருக்கு ஒத்திவைத்து விட்டதாக ஜனாதிபதி அறிவித்து விட்டார் அல்லவா? இதைப்பற்றிய லண்டன் டைம்ஸ் பத்திரிகை எழுதியுள்ள நீண்ட தலையங்கம் ஒன்றில் காணப்படும் குறிப்புக்கள் இவை.

"மே மாதத்திலேயே தேர்தல்கள் முடிவடைந்துவிட வேண்டுமென்று பிரதமர் நேரு மிகச் சமீபத்தில்தான் கூறினார். ஆனால் ஜனாதிபதியின் அறிக்கை தேர்தல்களை இன்னும் ஓராண்டு தள்ளிப்போட்டிருப்பது ஆச்சர்யமாகத்தான் தோன்றும். ஒத்திவைப்பதற்குக் கூறப்படும் காரணங்கள் மிகவும் சரியானவை. ஏனென்றால் தேர்தல் மிகவும் கடினமான பல வேலைகளைக் கொண்டிருக்கிறது.

"புதிய இந்தியாவின் வாக்காளர்களின் எண்ணிக்கை சுமார் 18 கோடியாகும். இவர்களில் பாதிப்பேர் பெண்கள். அமெரிக்காவின் மொத்த ஜனத்தொகை அளவுக்கு இருக்கிறது இந்திய வாக்காளர்களின் எண்ணிக்கை.

"பார்லிமெண்டரி ஜனநாயக முறையில் இதுவரை உலகம் கண்டும் கேட்டுமிராதமா பெரும் நிகழ்ச்சியாக இருக்கும் இந்தியப் பொதுத் தேர்தல்கள். உலகத்தில் எந்த ஒரு தனி நாட்டிலும் இவ்வளவு பெரிய அளவில் ஒரு தேர்தல் நடைபெற்றதில்லை.

"பக்கம் ஒன்றுக்கு 40 வாக்காளரின் பெயர் வீதம் அச்சிட்டதில் 20 லட்சம் தாள்கள் ஆகும். இந்த வாக்காளர் ஜாபிதாவின் முழுத்தொகுப்பு ஒரு பிரதியை மட்டும் ஒரு அலமாரியில் வைக்கவேண்டுமானால் 200 கெஜ நீளமான ஒரு அலமாரி வேண்டும்.

"இமய மலையைப் போன்ற பெரிய வேலை இது இதைச் செய்துமுடிப்பதற்கு எவ்வளவு காலம் ஆகுமென்பதை இந்திய சர்க்கார் சரியாக முதலில் தெரிந்துகொள்ளவில்லை. ஆனாலும் குடியரசு பிரகடனப்படுத்தப்பட்டவுடனேயே இந்த வேலையை தாமதிக்காமல் ஆரம்பித்துவிட்டார்கள் என்பது உண்மை.

"டில்லி பம்பாய் ராஜ்யங்களின் ஜாபிதா முன்னமேயே தயாராகிவிட்டன. இந்தியாவின் இதரப் பகுதிகளில் குறிப்பாக கிராமங்களில் ஜாபிதா தயாரிப்பு வேலை மிகவும் மெதுவாகத்தான் நடைபெறுகிறது. எப்படியும் ஜாபிதா தயாரிப்பதென்பது தேர்தலின் ஆரம்ப கட்டம்தான். ஏனென்றால் திருத்தங்கள், விட்டுப்போனதை சேர்ப்பது ஆகிய பல நிலைகளைக் கடந்துதான் இறுதியான பட்டியல் உருவாகும்.

"அப்படியே ஜாபிதா தயாராகிவிட்டாலும் கூட தேர்தல் நடைமுறை ஏற்பாடுகள் பாக்கி நிற்கும். தொகுதிகளைப்பிரித்துக்கணக்கிடுவதில் சங்கடங்கள் உண்டு. மற்ற நுணுக்கங்களும் பல உண்டு. இதிலிருந்தெல்லாம் பொதுத்தேர்தல் எவ்வளவு பெரிய சாதனை என்பது விளங்கும். ஆகவே ஒத்திப்போடப்படுவதில் குறைகூற ஒன்றுமில்லை.

"தவிர்க்க முடியாததானாலும் இந்த ஒத்தி வைப்பு காங்கிரஸிலேயும் சரி, வெளியேயும் சரி, பலருக்கு ஏமாற்றத்தை உண்டாக்கியிருக்கிறது. உடனே தேர்தல் நடந்தால் தங்களுக்கு வெற்றி கிடைக்காது என்று சில காங்கிரஸ்காரர்கள் கொண்டுள்ள அச்சத்திற்கு இந்திய சர்க்கார் இணக்கம் காட்டித்தான் இப்படி ஒத்திப்போட்டுவிட்டார்கள் என்று காங்கிரஸுக்கு எதிராக உள்ளவர்கள் கருதுகிறார்கள். கூடுமான வரையிலும் விரைவாகத் தேர்தலை நடத்தி விடுவதுதான் விவேகமானதென்றே காங்கிரஸ் தலைவர்களிலும் பலர் எண்ணுகிறார்கள். ஒருவேளை பலமான எதிர்க்கட்சி ஒன்றும் இல்லாத நிலையில் இப்போதே நடத்தி விடுவது தான் காங்கிரஸின் வெற்றிக்கு வசதியாகவும் இருக்கும்.

"ஆயினும் எதிர்ப்பில்லாத நிலை வெகுநாட்களுக்கு நீடித்திருக்க முடியாது. இப்போதே காங்கிரஸுக்குள் ஜனநாயக முன்னணி ஒன்றை தோழர் கிருபாளானி தோற்றுவித்து சர்க்காரின் கொள்கைகளை வன்மையாக எதிர்க்க ஆரம்பித்து விட்டார். மேற்கு வங்காளத்தில் டாக்டர் பி. ஸி. கோஷ் புதுக் கட்சி ஒன்றை ஆரம்பித்திருக்கிறார். இவைகளைத் தவிர காங்கிரஸுக்கு வெளியேயும் எதிர்க் கட்சிகள் வேகமாக உருவாகின்றன.

"தேர்தல் வர இன்னும் 12 மாதங்கள் இருக்கிறது. இடைக் காலத்தில் எதிர்ப்பு சக்திகள் பலமடைந்துவிட வசதியுண்டு. தேர்தல் வரும் சமயத்தில், இதுவரை காங்கிரஸ் படைத்து வந்த அதிகாரம், புதிய இந்தியாவை சிருஷ்டித்துத் தந்த பெருமை, இவற்றைப்பற்றி மட்டும் கருதாமல், அதிகார வசதியைப்பெற்றதனால், நிர்வாகத் துறையிலும், கிராமவாசிகள் புனர் வாழ்வுக்கும் காங்கிரஸ் என்ன சாதித்திருக்கிறது என்ற கேள்வியைக் கேட்டுத்தான் வாக்காளர்கள் தங்கள் ஆதரவைக் கொடுப்பார்கள்."

## தொழிற்சாலை பாதுகாப்பு

தொழிற்சாலைகளில் பாதுகாப்பு என்னும் பொருள் பற்றிய சிறந்த சொற்பெருக்கு ஒன்றை, திருச்சி ரோடரி கிளப், அகில இந்திய இஞ்சினீயர்கள் சங்க திருச்சிக் கிளை ஆகிய ஸ்தாபனங்களின் கூட்டு ஆதரவில், திருச்சி தென்னூர் பவர்ஹவுஸில் தொழிற்சாலைகளின் இன்ஸ்பெக்டர் திரு. எஸ். பரமநாயகம் 29-11-50 மாலை நிகழ்த்தினார்.

ரோடரி கிளப்பின் வேலைப் பயிற்சித் திட்டத்தின் கீழ் இந்தக் கூட்டம் நடைபெற்றது. இரண்டு ஸ்தாபனங்களின் தலைவர்களும் நிகழ்ச்சியின் தலைமை ஏற்றிருந்தனர். பிரிட்டிஷ் செய்தி ஸ்தாபனத்தாரின் திரைப்படத்துணுக்குகளுடன் விளக்கமான முறையில் சொற்பெருக்கு அமைந்திருந்தது.

தொழிற்சாலைகளில் ஏற்படும் விபத்துக்களின் அடிப்படைக்காரணங்களை சொற்பெருக்காளர் ஆராயும்போது. பழுதான யந்திரங்களினால் பத்து சதவிகிதம் விபத்துக்கள் தான் ஏற்படுகின்றனவென்றும். பெரும்பாலான விபத்துக்களுக்கு தொழிலார்களின் கவனக்குறைவே காரணமென்றும் விளக்கினார். தொழிற்சாலைகளில் யந்திங்களை மட்டுமின்றி தொழிலாளிகளையும் பாதுகாப்பது தொழில் வெற்றிக்கு அடிப்படையாக இருக்கிறதென்பதைக் குறிப்பிட்டார். யந்திரங்களைக்கையாளும் முறைகளில் ஊழியர்களுக்குத் தகுந்தபயிற்சி கொடுப்பதிலும். அவர்களுக்கு உற்சாகமுண்டாக்குவதிலும் தொழிற்சாலை அதிபர்கள் மிகுந்த கவனம் செலுத்துவதன் மூலம். யந்திரங்களுக்கும். ஊழியர்களுக்கும், பாதுகாப்பு அளிக்கக்கூடுமென்றும், உற்பத்தியை அதிகரிப்பதில் இவை அடிப்படையான கோட்பாடுகளாக இருக்க வேண்டுமென்பதையும் அவர் வலியுறுத்தினார்.

## நில உரிமை, நில சுதந்திரம் இவற்றின் தொடர்பை ஸ்ரீ ப்ரன்னன் விளக்குகிறார்

அமெரிக்க விவசாய இலாகாவின் காரியதரிசி ஸ்ரீ ப்ரன்னன், வடக்கு டகோடா விவசாயிகள் யூனியனில் பேசும்பொழுது உலகில் உதவிகோரும் நாடுகளுக்கு நாம் ஆதரித்துதவ வேண்டும் என்று தெரிவித்தார்.

மேலும் அவர் கூறியதாவது:

ஜனநாயக அடிப்படையில் பண்ணைகள் நடத்தி நிலம் இல்லாத குத்தகைக்காரர்களை பண்ணைக்காரர்களாக ஆக்கவேண்டும். அமெரிக்க பொருளாதார அரசியல் சுதந்திரங்கள் மூலம் ஆகிய விவசாயிகள் திடமான நிலக் கொள்கையை அனுசரிக்க வேண்டும்; நம்பிக்கையில்லாத கம்யூனிஸ்டு பிரசாரங்களை அனுசரித்து அல்ல.

நிலக் குத்தகைக்காரர்களுக்கு அதன் மகசூலில் சரியான பாகம் கிடைப்பதில்லை. அந்நிலத்தில் ஒரு விதமான பாத்தியதையும் அவர்களுக்கு இல்லை. இம்மாதிரியான நில உரிமையில், உழைத்தவனுக்கு ஒன்றுமில்லாமல் போய், நம்பிக்கையில்லாது கம்யூனிஸத்தின் தவறான பிரசார வலையில் விழ ஏதுவாகிறது.

கூட்டு விவசாயமும், கூட்டுப்பண்ணைச் சொந்தமும்தான் அமெரிக்க சரித்திரத்தின் மாதிரியாகும். இதனால்தான் உலகில் அல்லலுறும் மக்களுக்கு நம்பிக்கை கொடுக்கமுடியும். பரந்த நிலச் சொந்தமும். நில உரிமையும். விவசாயி-நிலச்சுவான்தார் பாத்யமும்தான் சுதந்திரத்தின் அடிப்படையானது.

இந்த கூட்டு பண்ணை முயற்சியில் தான் உண்மையான அமெரிக்க விவசாயம் இயங்குகிறது. இம்மாதிரியை நாம் காப்பாற்றி. நன்கு வலிவடையச்செய்து உலகில் வெளிநாடுகளுக்கு நம்மை ஒரு சான்றாக எடுத்துக்காட்ட வேண்டும். —(யூஸிஸ்)

## மலேரியா தடுப்பு முறையால் அதிக மகசூல் கிடைக்கிறதென உலக சுகாதார ஸ்தாபனம் கூறுகிறது

டி. டி டி மருந்தைத் தெளிப்பதன்மூலம் மலேரியாவைக் குணப்படுத்தும் வேலையில் ஐ. நா. வின் உலக சுகாதார ஸ்தாபனம் ஈடுபட்டிருக்கிறது. இப்பரிசீலனையின் மூலம் மலேரியா அதிக அளவில் குறைந்ததோடல்லாமல் நிலங்களில் அதிக மகசூலும் கண்டிருக்கின்றன என்று உலக சுகாதார ஸ்தாபனம் வெளியிட்ட ரிப்போர்ட் ஒன்று கூறுகிறது

24,000 மக்களடங்கிய 193 சதுர மைல் விஸ்தீர்ணத்தில் இக்கோஷ்டி மருந்தைத் தெளித்தது. நேரடியாகச் செய்த பரிசீலனையில் மலேரியா மிகப் பெரிய அளவில் குறைந்து நல்ல பலனைக் கொடுத்தது மருந்து தெளிக்கப்பட்ட இடங்களில் ஒரு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு மலேரியா வரவில்லை. ஆனால் தெளிக்கப்படாத இடங்களில் அதே வயதுள்ள குழந்தைகளில் 100க்கு 7-பேர் நோயால் பீடிக்கப்பட்டன.



## குழந்தையின் கேள்வி (6)

'சுராஜ்'

அன்று கோவிலில் கார்த்திகை ஞாயிற்றுக்கிழமை தரிசனத்திற்காக மனைவியும் விஜயாவும் கைக் குழந்தையுடன் சென்றிருந்தார்கள். நான் வீட்டில் தங்கி விசராந்தியாக நாளை படிக்கலாம் நாளை படிக்கலாம் என்று சேர்த்துப் பெருங்கட்டாகி இருந்த தினசரிகளிலீடுபட்டேன். அவர்கள் போய் அரை மணிகூட இருக்காது அடுத்த வீட்டுப் பெண் அலறிப்புடைத்துக் கொண்டு ஓடிவந்தாள் 'மாமா' 'மாமா'' வென்று கத்திக்கொண்டு.

அவள் வந்த பரபரப்பின் பொருள் புரியாமல் என்ன என்ன என்றேன்.

குழந்தைக்கு...என்னென்னவோ பண்றது......பயமாயிருக்கு.....ஓடி வாங்களேன்' என்றாள் அவள்.

சிரித்து விளையாடிக் கொண்டு கோவிலுக்குப் போன குழந்தைக்கு என்ன வந்து விட்டது?

போட்டது போட்டபடி ஓடினேன் கோவிலுக்கு!

அங்கு நான் கண்ட காட்சி! ஒரே கூட்டம்! சப்ரிஜிஸ்தராபீஸ் கிளார்க்கு குழந்தைக்கு இசிவு! கோவிலில் வந்து விட்டதாம்! என்று தெரியாதவர்களுக்குத் தெரிந்தவர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள். விஜயாதான் கொஞ்சம் தைரியமாய்ப் பேசினாள். அவள்—என் மனைவியால் பேச முடியவே இல்லை—அவள் கண்களிலிருந்து நீர் ஆறாகப் பெருகிக் கொண்டிருந்தது.

''அப்பா...இருந்தாற் போலிருந்து குழந்தைக்கு கைகால்களெல்லாம் இழுத்தன அப்பா...பேச்சு மூச்சில்லை...பயமாயிருக்கப்பா என்றாள்

குழப்ப நிலையில் இருந்த என் மனம்திடீரென ஒரு முடிவுக்கு வர மறுத்தது. சற்று நேரத்து அமைதிக்குப் பிறகு குழந்தையை தோளில் சாத்திக் கொண்டு புறப்பட்டேன் மனைவி—விஜயா—அவர்களுக்குப் பின்னால் ஒரு ஜனத்திரள்—ஊர்வலம் போலப்பின்தொடர்ந்தது.

டாக்டர் வீட்டுக்குப் போனேன். கதவு வெறுமனே சாத்தியிருந்தது! வாயிற்பக்கத்து அறையில் அவர் படுத்துக் கொண்டிருந்தது தெரிந்தது. அப்போது மாலை 4 மணி என்ன தூக்கமோ? இறைவனுக்குத் தான் வெளிச்சம்.

''சார்...சார்...சார்...'' கொஞ்சம் அதிகப்படியான சப்தம்தான் நான் போட்டு விட்டுவிட்டேன். நானா பேசுகிறேன். பிள்ளைப்பாசம் தானே வாயெடுத்துப்பேசுகிறது அப்போது!

கொஞ்சம் புரண்டு கொடுத்தார் டாக்டர்! ஒன்று சொல்ல மறந்து விட்டேன்! அவர் எங்கள் ஊர் தர்ம வைத்தியசாலை டாக்டர்! அரசாங்க ஊழியர்! அவசர கேசுகள் எந்த நேரத்திலும் பார்க்கப்படும்' என்ற போர்டுக்கு கீழே அமர்ந்து வேலை செய்யும் அதிகாரம் பெற்றவர்!

''யார்ரா அது''

பியூனைப்பார்த்துக்கேட்டார் அவர் இப்படி.

''ஏதோ அர்ஜண்டு கேசாம்''

அவர் ஜன்னல் பக்கம் திரும்பினார்.

'ஆஸ்பத்திரிக்கு கொண்டு போங்கய்யா எல்லாம் வரேன்'

மறுபடியும் படுத்து விட்டார் டாக்டர்.

* * *

என் தலை சுழன்றது! யமனுடன் போராடும் குழந்தையுடன்......கடவுளையே காணப்போகும் ஆதாரத்தில்......வந்த இடத்தில் கிடைத்த வரவேற்பு.......

பின்னால் வந்த ஜனத்திரள் முணுமுணுத்தது..... என்ன மனுஷனய்யா இவன்......ஊரே திரண்டு வந்திருக்கிறது...தூங்குறாரும் தூக்கம்! குழந்தையை எடுத்துக்கொண்டு வேகமாக வீட்டைநோக்கி நடந்த என்னை என் மனைவியும் மற்றோரும் பித்தனென்று தான் எண்ணியிருக்க வேண்டும்!

''அவனை விட்டால் வேறு வழியில்லையே ஐயா...இப்படிப்போனால் குழந்தை'' என்றார் ஒருவர்.

என்மனைவியும் அழுதுகொண்டே பின் தொடர்ந்தாள் விஜயா மட்டும் பேசவில்லை

அவளுக்குத்தந்தையின் செயல்களில் நம்பிக்கை உண்டு

* * *

வீட்டுக்கு வந்ததும் குழந்தைக்கு பக்கத்து வீட்டுப்பாட்டியின் வேப்பிலை வைத்தியம் ஆரம்பித்தது இரவு வெகு நேரத்துக்குப்பிறகு குழந்தை கண்திறந்தான்!

விஜயா கேட்டாள் மெள்ள ''ஏனப்பா......என்ன தைரியத்திலப்பா அப்படி வந்து விட்டீர்கள்...ஏதாவது ஆயிருந்தால்....

நான் சொன்னேன் ''விஜயா! வைத்தியனின் மருந்தைவிட அவனது மனம்தான் முக்கியம் அது சரியில்லாவிட்டால் என்ன மருந்து சாப்பிட்டுத்தான் என்ன பலன்? என்றேன். விஜயா கேட்டாள் ''ஏனப்பா...தர்ம வைத்திய சாலையில் இது போன்ற ஆட்களைப் போடுகிறார்களே!......நமக்கே இந்தகதியானால் நம்மைவிட ஏழைகள் இருக்கிறார்களே...அவர்கள்...

'இதுபோன்ற ஆட்களை யாரும் தொப்பென்று கொண்டு வந்து போடவில்லை...நல்ல மனதுடன் உள்ள நம்போன்ற ஆள்தான் வருகிறார்...பிறகுதான் ... மனதைக்கல்லாக்கிக்கொண்டு......

''ஏனப்பா கல்லாகி விடுகிறது...

''சேவை உணர்ச்சி மறைந்து கூலிக்கு மாரடிப்பு என்ற நிலைவந்து காசாசையும் கலந்து கொண்டால் யாரும் இப்படித்தானம்மா ஆய்விடுகிறார்கள்.

சற்றுப்பொறுத்து விஜயா கேட்டாள்.

''ஏனப்பா...நாமே ஒரு பெரிய பண்ணையாராய்...ஊரின் பெரிய பணக்காரராயிருந்து காரில் போய் இறங்கினால் நடந்த நிகழ்ச்சிகளே வேறாயிருந்திருக்குமல்லவா? என்றாள்.

நான் சிந்தனையில் ஆழ்ந்து விட்டேன். வழக்கம் போல அவளது கேள்விச்சுழலில் என் மனம் சிக்கித் தவித்தது!

---

## மன்னர் விருதுக் கொடிகள் மங்கல இருப்பிடம் சேர்கிறது.

இந்திய ராணுவத்தின் பற்பல படைப்பிரிவுகளும் நீண்ட காலமாகத் தீரசேவை செய்து அதைப்பாராட்டும் வகையில் ப்ரிட்டிஷ் மன்னர்களிடமிருந்து விருதாகப்பெற்ற விசேஷ கொடிகள் இந்தியக்குடியரசின் அந்தஸ்துக்கேற்ப நடப்பிலிருந்து எடுபட்டு நன் மங்கலமாகப் பத்திரப்படுத்தப்படும் விழா டேராடூன் பாதுகாப்புக் கழகத்தில் இன்று நடைபெற்றபோது பாதுகாப்பு மந்திரி சர்தார் பலதேவ் சிங் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம் கீழே தரப்படுகிறது:

இக்கொடிகளைப் பத்திரப்படுத்தும் இந்த விழா கீர்த்திமிக்க நெடுநாளைய வரலாற்றின் இறுதிக்கட்டமாக விளங்குகிறது. அதேபோல் எல்லாப் படைகளுமே இந்த வீரபரம்பரைத்தீரச்செயல்களை எதிர்காலத்திலும் இன்னும் அதிகச் சிறப்புடன் செய்யப்போகும் ஒரு புது சகாப்தத்தின் ஆரம்பமாகவும் அது அமைகிறது.

ப்ரிட்டனுடன் நமக்கிருந்த நீண்டநாளைய தொடர்பு இருந்து வந்த காலத்தில் நமது ராணுவப் படைகளின் அபார சேவையைப் பாராட்டி இக்கொடிகளை ப்ரிட்டிஷ் மன்னர்கள் வழங்கி வந்தார்கள். படைகளின் தனித்தனிக்கொடிகளுடன் இவ்விருதுக்கொடிகளையும் அவை போர் அரங்கங்களுக்கு எடுத்துச்சென்று வந்தகோடு, அக்கொடிகள் எதிரிகளின் கையில் சிக்கிவிடாமற் காப்பதற்காகப் பல வீரர்கள் அரும் போர் நிகழ்த்தி வீரமரணமும் எய்தியிருக்கின்றனர்.

இந்தியா இப்போது சர்வ சுதந்தர ஆதிபத்தியக் குடியரசாகிவிட்டது. எனவே 1950 ஜனவரி 26-வுடன் தொடங்கியுள்ள இப்புதிய சகாப்தத்தில் புதிய அந்தஸ்துக்கேற்ப,பழைய நிலைமையைக் காட்டும் அறிகுறியான இவ்விருதுகள் நடப்பிலிருந்து எடுபட்டுப் பத்திரமாக வைத்துக்காப்பாற்றப்படுவதுதான் பொருத்தமாயிருக்கும். பாதுகாப்புக்கழகத்தைத் தவிர இதற்கு ஏற்ற வேறிடம் எது இருக்க முடியும்? எதிர்காலத்தில் இந்திய ராணுவ அதிகாரிகளாக இங்கே பயிற்சி பெறும் ஒவ்வொருவரும் இக்கொடிகள் பறைசாற்றி நிற்கும் பழம்பெருமையையும் பெருங்கீர்த்தியையும் உணர்ந்து அதன்மூலம் வீர உணர்ச்சி ஊட்டப்படுவார்கள் என்று நான் நிச்சயமாய் நம்புகிறேன்.

இந்த விருதுக் கொடிகள் பெற்ற வீரப்படைகள் இந்தியாவின் பல பகுதிகளையும் சேர்ந்த உன்னத வீரர்களைக்கொண்டிருந்தன. மகாராஷ்டிரர், ரஜபுத்திரர், ஜாட்கள், கார்க்கர், சீக்கியர், சென்னைவாசிகள் முதலியோர் சமாதான காலத்திலும் யுத்தகாலத்திலும் செய்த மறக்க முடியாத ஒப்பற்ற தீரச்செயல்களால் கிடைத்த கொடிகள் தாம் இவை. இன்று உலகம் முழுவதிலும் இந்திய வீரரின் உன்னதப் போர்ப்பண்பு பாராட்டிப் போற்றப்படுகிறது. உலகப் போர்களில் பல அரங்கங்களிலும் அவர்கள் செய்த தீரச் செயல்கள் சரித்திரத்தில் இடம் பெற்றுள்ளன. இதர நாடுகளில் வீடுகள்தோறும் இந்திய வீரரின் புகழ் பேசப்படுகிறது. இந்த அரிய வீர மரபை நாம் பெருமிதத்துடன் பாராட்டுகிறோம்.

இந்த வீர மரபு இன்று நேற்று ஏற்பட்டதல்ல; ராமாயண பாரத காலந்தொட்டு வழிவழி வருவதாகும். இந்த இதிகாசங்களை வெறும் கற்பனைக் கதை என்று சிலர் கூறக்கூடும். எது எப்படியாயினும் நான் இந்த வீர பரம்பரைபற்றிப் பெருமைதான் அடைகிறேன். சமீப காலங்களில் நம் நாட்டு அரசர்கள் நிகழ்த்திய போர்கள் எல்லாம் வேற்றுமை மலிந்த இந்நாட்டின் அடிப்படை ஒற்றுமையை உறுதிப்படுத்தி நாட்டை ஒரே ஆட்சியின்கீழ்க் கொண்டுவருவதற்காகவே நடத்தப்பட்டன. இந்த லட்சியத்துக்காகப் பல்வேறு இனத்தாரும் மக்களும் அல்வப்போது தம் பங்கைச் செய்திருக்கின்றனர்; அப்படி அரும்பணி செய்கையில் வீரத்திலும் போர்முறைகளிலும் அவர்கள் உன்னத வீரர்களாகவே திகழ்ந்திருக்கின்றனர். அதே உன்னதப் பண்பை இன்றும் இந்திய ராணுவத்தினரிடையே நாம் காண்கிறோம்.

நமது வீரர்கள் மத்தியிலேயே உடனிருந்து அவர்களை வெகுவாக நேசித்து பிற நாடுகள் வியந்து பாராட்டும் அளவுக்குத் திறமை பெறும்படி பயிற்சி அளித்துவந்த பிரிட்டிஷ் அதிகாரிகளின் தொடர்பு இருந்துவந்த காலத்தை நாம் மகிழ்ச்சியோடு ஞாபகப்படுத்திக்கொள்கிறோம். இந்த விருதுக் கொடிகள் படையினரின் கூட்டான சேவைக்கு அளிக்கப்பட்டவை என்பதையும் இச்சந்தர்ப்பத்தில் நினைவுறுத்திக் கொள்கிறோம். இக்கொடிகளைப் பத்திரப்படுத்திவிட்டபடியால் அவைகளைப் பெற்றிருந்த படைகளின் பெருமை மிக்க அழியாப் புகழை நாம் அகற்றிவிட்டதாகாது. பின்கால வீரர்கள் பெருமிதத்துடன் பின்பற்றக்கூடிய அருமையுடன் அவை என்றென்றும் விளங்கிவரும்.

# மறைத்துப் பயனில்லை

'அரைப்பட்டினி'

காங்கிரஸ்காரர்களின் ஆட்சிக்கு எதிராகப் பிரசாரம் செய்து தேர்தல்களில் அவர்களைத் தோற்கடிப்பதில் முனைந்திருக்கும் கட்சியினருக்கு, இன்று நாட்டில் இருந்துவரும் உணவுப் பஞ்சம் ஒன்றே சரியான பலம் கொடுக்கக்கூடியதாக இருக்கிறது. ரேஷன் கிடைக்காமல் ஆங்காங்கு கிராமங்களில் மக்கள் அரைப்பட்டினியாகவாடுகிறார்கள். இதைத் தீர்த்து அவர்களுக்கு உணவு கொடுக்க ஏற்பாடு செய்ய நிர்வாகத்தினரால் முடியவில்லை யென்ற உண்மையை மக்களுக்கு யாராவது போய்ச் சொல்லித்தான் தெரிய வேண்டுமென்றில்லை. அவரவர்க்கும் நன்கு தெரிந்தேயிருக்கிறது. போதாக்குறைக்கு கொள்முதல் அதிகாரிகளின் ஆர்ப்பாட்டங்களில் கிராமத்து விவசாய மக்களின் நெஞ்சில் பெரும் கசப்பு உண்டாகியிருக்கிறது.

தாம்பரத்தில் அரைப்பட்டினியினால் பெண்கள் அவதிப்படுவதையும், குழந்தைகளை விற்றுவிட அவர்கள் தயாராயிருப்பதையும் தூது கோஷ்டி ஒன்று உணவு மந்திரியிடம் சென்று முறையிட்டிருக்கிறார்கள். ரேஷன் கடைகள் வெறும் கேலிக் கூத்தாக இருக்கிறதென்று அவர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

யார் பேட்டி பார்த்தால் என்ன? "கனம் மந்திரியவர்கள் கவனித்து ஆவன செய்வதாக அனுதாபத்துடன் வாக்களித்தார்" என்று பத்திரிகைகளில் செய்தி வருவது சம்பிரதாயப் பெருமிதமாகி விட்டது.

பட்டினிச் சாவு கிடையாதென்று மறுப்பதும் ரேஷன் கடைகள் ஒழுங்காகத் தான் நடைபெறுகின்றன என்று பிடிவாதமாக சாதிப்பதும் தான் தங்கள் வேலை யென்று உணவு இலாகா நினைத்துக் கொண்டிருப்பது போல் தெரிகிறது.

திண்டிவனம் தாலூகாவில் ரேஷன் கிடைக்காமல் மக்கள் அவதிப்படும் செய்தியை நேரில் விசாரித் தறிந்து மாஜிபிரதமர் ஓமந்தூர் ரெட்டியார் பரிதாபக் குரல் கொடுத்தார். உடனே புள்ளி விபரங்களுடன் சர்க்கார் அதிகாரிகள் அதை மறுப்பதில் தான் கவனம் செலுத்தினார்களே யன்றி எடுத்துக் காட்டும் உண்மையை உணர்வதில் சிரத்தையே கொள்ளவில்லை.

தாம்பரம் தூதுகோஷ்டியினர் இப்போது எடுத்துக் காட்டும் பயங்கர நிலைமைக்கு உணவு மந்திரி என்ன கூறப்போகிறார் செய்யப் போகிறார் என்பதை இனி மேல் தான் பார்க்க வேண்டும்.

டில்லியில் உணவு மந்திரி முன்ஷியின் உணவு விமர்சனம் வெறும் கண் மூடித் தனமாக இருக்கிறது. அகில இந்தியாவிலும் பீகாரில் ஒரே ஒரு பிச்சைக்காரன் மட்டும தான் உணவின்றி இறந்து போனான் மற்றப்படி உணவுப் பஞ்சநிலை மாறி விட்டதென்று கூறுகிறார். ஆனால் ஆறு அவுன்ஸ் எட்டு அவுன்ஸாக எப்போது உயரும் என்பதை சென்னை உணவு மந்திரியே தெரிந்து கொள்ள முடியவில்லை.

உண்மை எப்படியிருந்தாலும் அதை வெளியே சொல்லக் கூடாது என்று சர்க்கார் கருதுகிறார்கள் போல் தெரிகிறது. பீதி உண்டாக்கக்கூடியவாறு உணவுப்பஞ்சம் பற்றிய செய்திகளைப்பிரசுரிக்க வேண்டாம் என்று பத்திரிகைகளைக்கேட்டுக் கொண்டு கொஞ்ச காலத்துக்கு முன்பு சென்னை சர்க்கார் ஒரு சுற்றறிக்கை அனுப்பினார்கள்.

புலியைவிடக் கிலி மிகவும் கொடியது என்பதைப்பத்திரிகைக்காரர்கள் அறிந்திருக்கிறார்கள். ஆயினும் நாட்டின் உண்மை நிலையை அறிந்து கொண்டு அவசரமாகக் காரியம் செய்ய சர்க்கார் இலாகாக்களின் சிகப்பு நாடாத்தனம் நன்கு தெரிந்திருக்கும்போது உண்மைகளைத் தேடிப்பிடித்துப் பிரசுரிக்காவிட்டால் நாட்டிற்கு எந்த சேவையும் செய்ய முடியாது. செய்தியைப்பிரசுரிக்காமல் இருந்துவிட்டதனால் மட்டுமே நாட்டில் பயங்கரமான நிலைமையில்லை என்று ஆகிவிட முடியாது. பஞ்சம் பற்றிய செய்திகள் வெளியாவதனால் நிர்வாகத்திற்கு அபகீர்த்தி ஏற்பட வேண்டுமென்பது பத்திரிகைகாரர்களின் நோக்கமல்ல. பரிகாரம் வேண்டுமென்பது தான் பத்திரிகைகள் செய்தியை வெளியிடுவதன் கருத்து.

அடிக்கடி செய்திகளை வெளியிட்டும் கூட சர்க்கார் உணவு இலாகா பரபரப்பு அடையவில்லையென்றால் சத்தமில்லாமல் இருந்து விட்டால் நிலைமை எப்படியாகுமென்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

உணவுப்பிரச்னையில் சரியான கவனம் செலுத்த வேண்டும் என்ற வழக்கமான வற்புறுத்துதல் செய்து கொள்வதுதவிர வேறு அமைதியான வழி ஒன்றும் இப்போதைக்கு புரியவில்லை. அவர்களுக்காவது புரிகிறதா என்பதும் தெரியவில்லை.

## உஷ்ணப்பிரதேசத்தில் நவீன ராணுவம்

சென்ற உலக மகாயுத்த காலத்தில் ஏறக்குறைய மிகவும் அப்பழுக் கற்ற முறையில் அமைக்கப்பட்ட நவீன ராணுவத்திற்கு யுத்தம் புரியும் முறைகள் மட்டும் கற்றுக் கொடுப்பதோடு சுகாதார விஞ்ஞானமும் கற்றுக் கொடுக்கப்படுகின்றது.

ஒரு அதிகாரி கூட தன்னுடைய கமாண்டிங் அதிகாரிக்கு தன்னுடையபக்க வாட்டில் உள்ள படைகளுக்கு உதவி அளிக்க வேண்டும் என்று கூற முன்வர மாட்டார். ஆனால் கொய்னாவின் சக்தியை அவ்வளவு எளிதில் நம்புவதில்லை.

அதிகாரிகள் மட்டும் அல்ல படையினர் கூட இம் மாதிரியே வாதம் செய்வர். ஒரு சிப்பாய் எதற்காக ஒரு சிறு கொசுவை பார்த்து பயப்பட வேண்டும் என்று கூறுவார். இந்த சிறு கொசு தான் மிகவும் பயங்கரமான மலேரியா வியாதியைக் கொண்டு வருகிறது. ஒரு முறை மலேரியா வியாதி அனுபவித்தவர்களுக்கு இந்த விஷயம் நன்றாகத் தெரியும்.

பழைய லீக் ஆப் நேஷன்ஸின் நிபுணர்கள் அடங்கிய மலேரியா கமிஷன் 1938-ல் பிரசுரித்த அறிக்கையின்படி தினசரி 6 குந்துமணி எடை கொய்னாவை மலேரியாகாலத்தில் உட்கொள்ளலாம் என்று கூறுகின்றனர். சிகிச்சைக்காக 5 முதல் 7 நாட்களுக்கு தினசரி 15 முதல் இருபது குந்துமணி எடை கொடுக்கப்படலாம். இந்த அறிக்கையின்படி 5/12 பக்கங்களில் இந்த சிகிச்சை விவரமாகக் கூறப்படுகிறது. அதே முறைதான் இன்று கையாளப் பட்டு வருகிறது.

TAM. 431

வியாபாரம் செழிக்க
எமது 'சிவாஜி'யில்
விளம்பரம்
செய்யுங்கள்!



டோங்கரேயின்
பாலாம்ருதம்
குழந்தைகளுக்கு
பிரசித்திபெற்ற டானிக்

## ஐரோப்பாவில் ஜி.டி. நாயுடு

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

அவரைப் பார்க்கக் கூடுமென்று கருதுகிறேன். நாட்டிங்ஹாமிலிருந்து டாக்டர் ராமஸ்வாமி அய்யரைச் சென்று சேர்ந்து கொள்ள நானும் உடனே லிவர்பூல் புறப்பட்டேன்.

அங்கே நடைபெற்றுக் கொண்டிருந்த மருத்துவ கண்காட்சிகள் டாக்டர்களுக்கென்றே பிரத்யேகமானவையாயிருந்ததனால் வெளியார்களை அங்கே அனுமதிப்பதில்லை. எனினும் வாசலில் ஏதோ சாக்குப் போக்குச் சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்து விட்டேன். காட்சிசாலையை யெல்லாம் நிதானமாகச் சுற்றிப் பார்த்து டாக்டர் இருப்பிடத்தைக் கண்டுபிடிப்பதற்கு நெடுநேரமாகி விட்டது. இரவு நடு ஜாமத்தில் இரண்டு டாக்டர்களையும் சந்தித்து, கடைசி வண்டியில் புறப்பட்டு நாங்கள் இரவே லண்டன் வந்து சேர்ந்தோம். இரவு அவ்வளவு அகாலத்தில் சோறு கிடைக்கவழியில்லை. தூக்கமும் இல்லை. காலையில் ரோட்னி ஹோட்டலுக்கு வந்து சேர்ந்தபோது எங்கள் அறையை வேறு யாரோ பிடித்துக் கொண்டு ஆக்ரமித்திருந்தார்கள். வேறு இடம் தேட வேண்டியதாகி விட்டது எங்கள் பாடு.




அமிர்தாஞ்சன்
சகல வலி நோவுகளுக்கும்
கைகண்ட மருந்து
எங்கும் கிடைக்கும்
அமிர்தாஞ்சன் லிமிடெட்
சென்னை, பம்பாய்,
கல்கத்தா, பெங்களூர்.

# இருளில் ஒளி!

[2-ம் பக்கத் தொடர்ச்சி]

தேடறதுதான் வேலையா?... அதெல்லாம் இங்கே எந்தப் பொண்ணும் ரெடியா இல்லே!.. போபோ!" —என்று அந்த மனிதன் சீறினன்.

"இல்லே!...இல்லே!...நான் பெண் கேட்க வரவில்லை"—என்று சிறிது நடுங்கிய குரலிலேயே பதில் சொன்னேன்.

"பின்னே?...பெண் கொடுக்க வந்திருக்கயா?...எனக்கொண்ணும் தேவையில்லே!...நீ போய்ச் சேரு."

"தேசிகாசாரியார் ஊரிலில்லையா?"

"ஊரில் இல்லாபலென்ன?... பதஞ்சலி சாஸ்திரி வீட்டிலே பணம் கறக்கப்போயிருக்கிறர்—போபோ! ..நீயும் போ!...உனக்கும் பங்கு கிடைக்கும்!..."

—பிறகு அந்த மனிதன் என் பதிலை எதிர்பாராமல் வெளியே போய்விட்டான். நான் வேறு வழியில்லாமல் அவிடத்தை விட்டு நகர்ந்தேன். பின்பு அரை மணி கழித்து அங்கே மறுபடியும் வந்தேன். கதவு சாற்றியிருந்தது. கதவைத்தட்டி "தேசிகாசாரியார்!..." என்று மும்முறை அழைத்தேன். கதவு திறக்கப்பட்டது. ஆனல் தேசிகாசாரியார் இல்லை. அதே முரடன் தான் இருந்தான்.

—"நீ என்ன?" ஒரு தடவை சொன்னல் மரியாதையாகப் போகமாட்டே?" என்று அதட்டினன்.

உள்ளதைச்சொல்ல எனக்குப் பயம். நேற்று பட்ட அவஸ்தை போதாதா?... புத்தியுள்ள மனிதன் எவனுவது மறுபடியும் அதே தவறைச் செய்வானு?...

வேறு வழியில்லாமல் நான் பதஞ்சலி சாஸ்திரிகள் வீட்டை நோக்கி நடந்தேன். வீட்டை நெருங்கியதும் பின்புறமாகச் சென்று பக்கத்து ஜன்னல் வழியாக உள்ளே கவனித்தேன். எதுவும் ஸ்பஷ்டமகாத் தெரியவில்லை. என்ன வந்தாலும் வரட்டுமென்று பின்புறச் சுவற்றின் மீதுதேறி உட்புறத்திலிருக்கும் தோட்டத்தில் குதித்தேன். செடி மறைவுகளில் ஒளிந்தபடியே சென்று சமையலறைக்கு அருகிலுள்ள இருட்டறையை அடைந்தேன். அங்கிருந்தபடி சமையலறையில் பேசும் பெண்களின் குரல் தெளிவாகக்கேட்டது,

"ஆமாம்!...அந்த ராமகிருஷ்ணன் உன் சொந்த அண்ணவா!..."

"இல்லையம்மா!... என்ருலும் அண்ணவைப்போலவே அவர் என்னிடம் உயிராக இருக்கிருர்!... பாவம்!... அவரைப் போய் அடித்து உதைத்து அவஸ்தைப்படுத்தியிருக்கிருர்களே!...".

"உஷ்!..இரைந்து பேசாதே!.. கிழம் வந்து தொலையப்போகிறது!..."

—பேச்சின் போக்கிலிருந்து பேசுகிறவள் அந்த வீட்டுநாட்டுப்பெண் என்றும் உண்மையிலேயே விரஜாவிடம் அனுதாபமுள்ளவளென்றும் அறிந்தேன். விரஜா உயிரோடிருக்கிருள்!... அவளுக்கு எவ்வித ஆபத்துமில்லை என்பதையறிந்தும் என் மனம் குளிர்ந்தது!... மூளைக் குழப்பம் தெளிவடைந்தது. ஆனல் அவளை அவ்விடத்தைவிட்டு மீட்பதெப்படி?......கணவனிடமிருந்து அவளைப்பிரித்து வைத்துப்பணம் பறிக்கும் பதஞ்சலியைப்பழி வாங்குவது எப்படி?.. அதன் வகை புரியாமல்தான் நான் திண்டாடினேன். இரவெல்லாம் அங்கேயே தங்கியிருப்பதென்றும் விடியற்காலத்துக்குள் ஒரு முடிவு செய்துகொண்டு வெளியேறுவதென்றும் தீர்மானித்தேன்.

நான் இந்தத் தீர்மானத்துக்கு வந்தபோது உட்புறம் ஒரு கனத்த குரல் கேட்டது—"ஆமாம்!... அவன்தான்!... சந்தேகமேயில்லை!... 2 தடவை வந்து கேட்டு விட்டுப்போனன்; சத்தியமாகச்சொல்லுகிறேன்!... அவன் இன்னும் இந்த ஊரை விட்டுப்போகவில்லை!.. இங்கேயே தான் இருக்கிறன்!..."

—இந்தக்குரல் வரவரப்பின் பக்கம் நெருங்கி வரவே நான் நடிங்கினேன். உயிரைக்கையில் பிடித்துக்கொண்டு அந்த இருட்டறையில் ஒரு மூலையாக ஒதுங்கி உட்கார எழுந்தேன்!...காலில் ஏதோ மிதிபட்டது....மறுகணம் "லொள்" என்று குறைத்தபடி நாயொன்று அங்கிருந்து ஓடிற்று. அந்த அதிர்ச்சி நீங்கு முன்பாகவே உள்ளிருந்து—"விரஜா!.. இனி அவனைப்பற்றி வாய்திறந்தாயோ கொலை செய்து விடுவேன்!...மரியாதையாக நான் சொல்கிறபடி கேட்கணும்!... நிஜமாகவே உனக்குப் "பதிபக்தி" இருக்குமானல் என்னோடு என்னிஷ்டப்படி இருக்கணும்!...நான் உன் கணவன்!... நான் சொன்னபடி நீ கேட்க வேணும்!... இல்லையானல் இன்னொரு பெண் இப்பவே ரெடியாயிருக்கிருள்!..என்ன சொல்றே!..

—குரல் அந்த தடியனுடையது- மகிழ்ச்சியும் துக்கமும் ஒருங்கே என்னை அழுத்தின!... உடனேயே உள்ளே ஓடிப்போய் விரஜாவுக்குப்புத்தி சொல்லி எப்படியாவது அவனைச்சமாதானப்படுத்த வேண்டுமென்று எனக்குத் தோன்றிற்று. ஆனல் மூன்ரும் முறையாக நான் அது மாதிரித்தவறைச் செய்ய விரும்பவில்லை!...

விரஜாவின் பதில் குரல் எதுவும் கேட்கவில்லை!...ஆனல்

"போறும் போறும்!... நமஸ்காரம் என்ன வேண்டியிருக்கு!...புறப்படு!...என்று அந்தத் தடியன் சொன்னதிலிருந்து விரஜா தன் சம்மதத்தைத் தெரிவித்து விட்டாள் என்று தெரிந்தது!...

"சரிசீக்கிரம் புறப்படுங்கோ! ரயிலுக்கு நாழியாச்சு!" என்ற பதஞ்சலி சாஸ்திரியின் குரல் கேட்டது!...பின்பு கால் மணி கழித்து சமயலறை விளக்கு அணைந்தது.

"சரி!...விரஜா புறப்பட்டுவிட்டாள்!" என்று நான் உணர்ந்தேன். கணவனை மீண்டும் அவள் அடைந்த பின் ஒரு தடவை அவளை நேரில் கண்டு ஆசீர்வதிக்க விரும்பினேன். ஆனல் முடியவில்லை; திருடன் போல் பதுங்கிப் பதுங்கி "காம்பவுண்ட்" சுவரோரமாகவே வாயிற்புறம் சென்றேன். சுவரோடு சுவரொட்டியபடி மல்லிகைக் கொடி மறைவிலிருந்தபடி கவனித்தேன். வாசலில் டாங்கா வந்து நின்றுகொண்டிருந்தது!...கிழவர் முன்னே சென்ருர். பின்பு விரஜா சென்று வண்டியில் ஏறிக்கொண்டார்!...

பதஞ்சலி சாஸ்திரி வெளியே வந்து—"பத்மனபா!... ஒழுங்கா குடித்தனம் பண்ணு அப்பா" என்ருர். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. வண்டி புறப்பட்டது!... பக்கத்துத்தெரு விளக்கருகில் செல்லும்போது விரஜாவைக்கவனித்தேன்!...

அதே சமயத்தில்—"யாரடா அங்கே?..." என்ற குரல் கேட்டது. என் சக்தியெல்லாம் ஒருங்கே திரட்டிக்கொண்டு அடங்கிருந்து பின்புறமாக ஓட்டம் பிடித்தேன்!...

அன்றிரவு அவர்கள் சென்ற அதே இரவு வண்டியில் நான் சென்னைக்குப் புறப்பட்டேன். ஆனல் நடுவில் அவர்களைச்சந்திக்க முயற்சிக்கவில்லை!...

நினைத்தால் நேற்று நடந்தது போலிருக்கிறது!... சொன்னல் யாரும் நம்பமாட்டார்கள்!... எட்டு வருஷங்களுக்கு முன்பு எனக்குச் சிறைவாசம் கிடைக்க வேண்டிய "சான்ஸ்" இருந்தது; அது நழுவி விட்டது!..

நேற்று வந்த கடிதத்தில் சகோதரி எழுதியிருக்கிருள்—"அண்ணு! நீ என் இருண்ட வாழ்வில் ஒளியைக் கொண்டு வந்தவன்..."

அசடு அவள்!..."இருளைக் கொண்டு இருளை அகற்ற முடியாது" என்பது அறியாமல் எழுதுகிருள்.

---

வைத்திய வாசஸ்பதி பண்டித P. S. ராமசர்மாவின்
சக்தி சஞ்சீவி
குழந்தைகளின் ஈரல்குலை கட்டிகளை குணப்படுத்தவும் வரசமல் தடுக்கவும் சிறந்த மருந்து
ஸ்ரீ சக்தி விலாஸ் வைத்தியசாலை. கரூர் (S. I. Ry.)

தந்தி விலாசம்: 'கோகுல்' Estd. 1909
போன் நெ. 57 Branch: MANNARGUDI

கும்பகோணம்
டி. எஸ். ஆர்
கம்பெனியின்
சந்தனதித் தைலம், கோகுல் பாக்குப் பொட்டலம், அரைக்கீரை விதைத் தைலம், கோகுல் வத்தி தினுசுகள்
இவைகளை உபயோகியுங்கள்.




கோகுல்
கூந்தல் தைலம்
தைலங்கள் கூந்தலுக்கு வளர்ச்சியையும், மூளைக்கு குளிர்ச்சியையும் கொடுப்பதில் நிகரற்றன.
எங்கள் ஆலிலை கிருஷ்ணன் டிரேட் மார்க்கை கவனித்து வாங்குங்கள்.
கோவை ஏஜண்டு: B. பாலபட்டாபி செட்டியார்
246, வைசியாள் தெரு, கோயம்புத்தூர்.



70, 73 வயதுள்ள தோழர்கள்



வேலையிலிருந்து திரும்புகிறார்கள்

# தொழில் செய்யும் கிழவர்

ஸ்டாப்போர்ட் ஷயரிலுள்ள ரூபரி ஓவன் அண்ட் கம்பெனி என்ற ஒரு இன்ஜினீரிங் தொழிற்சாலையின் சேர்மனாகிய மிஸ்டர் ஓவன் என்பவர் புரட்சிகரமான விதத்தில் "கிழத் தொழிலாளிகளின் ஒர்க்ஷாப்" என்றதை உருவாக்கியுள்ளார். இந்தத்தொழிற்கூடம் பிரதான தொழிற்சாலைக்கு 1-மைல் தொலைவில் நிர்மாணிக்கப் பட்டுள்ளது. இங்கு எவ்வித வெளிப்புற சந்தடியுமின்றி அமைதியான வகையில் 70 வயதுக்குமேற்பட்ட 12 தொழிலாளிகள் வேலைசெய்கிறார்கள். அவர்கள் வெளிநாட்டு ஏற்றுமதிக்கான விவசாயக்கருவிகள், சாதனங்கள், ஆபீஸ் உருப்படிகள் போன்றவைகளின் பாகங்களை துளைசெய்து பூட்டுகிறார்கள். இந்தப்பரீட்சார்த்தகரமான ஆரம்பம் 10 மாதங்களாக நடைபெற்றுவருகிறது. நல்ல பலனும் கிட்டியுள்ளது. 70-வயதுக்கு மேற்பட்டவர்கள் தொழில் செய்யும் திறன் படைத்தவர்களே என நிதர்சனமாக நிரூபித்துக்காட்டுகிறது இந்தத் தொழிற்கூடம்.

இந்தத்தாத்தாக்கள் தினமும் காலை 8-30 மணிக்குச்சென்று, 7½மணி நேரம் தொழிலில் ஈடுபட்டு, சாயந்திரம் 5 மணிக்கெல்லாம் வீடு திரும்புகின்றனர். வாரம் ஐந்து நாட்களே இவர்களுக்கு வேலை. அவரவர் வல்லமைக்குத் தகுந்தாற்போல் அவர்கள் சாவகாசமாக வேலைசெய்யலாம். வார ஊதியமாக 4 பவுன் பெறுகிறார்கள்.



இவர் வயது 84



தள்ளாத வயதிலும் தளரா ஊக்கம்



சிறுவரைப்போலவே சுறுசுறுப்பு

ஒர்க்ஷாப்பின் முன்-அறையில்-மத்தியான இடைவேளையில்-ஓய்வு எடுத்துக்கொள்ளவும், ரேடியோ கேட்கவும், பத்திரிகை படிக்கவும், சதுரங்கம் ஆடவும், வசதிகள் செய்துகொடுக்கப்பட்டுள்ளன.

இந்தத் தொழிற் கூடத்தினின்று வரும் லாபப் பணம் மேலும் பல சௌகரியாதிகளை பண்ணித்தரவும் தொழில் விஸ்தரிப்புக்கும் செலவிடப்படுகிறது.

Edited, Printed and Published by Thiruloka-Sitharam, at the Hanuman Press, Samaspiran Street, Tiruchirapalli